ஸ்ரீ:

# ஸ்ரீ ஸித்தாந்த த்ரய ஸங்க்ரஹம்

## श्रीसिद्धान्तत्रयसंग्रहः

ஆசிரியர்:

மஹாமஹோபாத்யாய கபிஸ்தலம்

ஸ்ரீ. உ. வே. தேசிகாசாரியார் ஸ்வாமி




திருமலை - திருப்பதி தேவஸ்தான வெளியீடு

1977

ஸ்ரீ:

# ஸ்ரீ ஸித்தாந்த த்ரய ஸங்க்ரஹம்

## श्रीसिद्धान्तत्रयसंग्रहः



மஹாமஹோபாத்யாய கபிஸ்தலம்

ஸ்ரீ உ. வே. தேசிகாசாரியார் ஸ்வாமியால்

அருளிச் செய்யப்பட்டது.

நியாயமீமாம்ஸா சிரோமணி

ஸ்ரீ கோழியாலம் – சடகோபாசாரியாரால்
(Lecturer, [Retd.] S. V. O. College, Tirupati)
சரிபார்க்கப்பட்டது.






திருமலை - திருப்பதி தேவஸ்தான வெளியீடு

1977

# முகவுரை

இந்தக் கிரந்தத்தின் கர்த்தாவான மஹாமஹோபாத்யாய ஸ்வாமியை அறியாதார் இல்லை. ஆஸேது ஹிமாசலம் உள்ள பண்டிதர்கள் இவருடைய அரும் பெருமையையும் அநிதர ஸாதாரணமான வைதுஷ்யத்தையும் அறிவர். அத்யாத்ம சாஸ்த்ர ஞானத்தில் இவரினும் பெரியாரில்லை. வயதில் மிக முதிர்வும் மிக்க தேகாசக்தியுமுள்ள இந்த ஸ்வாமி, தன்னுடைய அத்யந்த விலக்ஷணமான ஞானத்தைக்கொண்டு, ஒரு அத்யாத்மதீபம்போல் உலகத்தில் சாச்வதமாய் பிரகாசித்துக் கொண்டு யாவருக்கும் தெளிவான ஞானம் உண்டாகும் படிக்கும், ஸம்சயவிபர்யயங்கள் ஏற்படாமல் இருக்கும்படிக்கும் மிகத்தெளிவாக இந்தக்கிரந்தம் செய்தருளியிருப்பது, மிகவும் லோகோபகாரம் ஆகும். ஸங்கல்ப ஸூர்யோதயத்தின் பத்தாவது அங்கத்தில் ''வித்யாஸந்ததிக்கு உலகத்தில் விச்சேதம் வராதபடி செய்ய விஞ்ஞாபனம் செய்கிறேன். ச்ருதிகளின் பாக்யமான பகவானிடத்தில் ஸர்வதா மனதையுடைய இம்மஹான், பூமியில் எழுந்தருளியிருக்கிற ஸமயத்திற்குள் தத்வம் முழுவதுமறிந்த இவரிடம் அறியவிரும்பும் விஷயங்களை எல்லாம் அவதானத்தோடு கேட்டு அறிந்துகொள்வீராக'' என்று ஸாதித்திருக்கிறபடிக்கும் ''பீஷ்மர் எழுந்தருளியிருப்பதற்குள் மனதிலுள்ள ஸம்சயங்களை எல்லாம் கேட்டுத் தீர்த்துக்கொள்ளும்'' என்று தர்ம புத்திரரைப் பார்த்து ஸர்வஸம்சயங்களுக்கும், சேத்தாவான கீதாசார்யன் ஏவினபடிக்கும் இந்த விபூதியில் இந்த ஸ்வாமி எழுந்தருளியிருக்க நாம் பாக்யம் பெற்றிருக்கிற காலத்திலேயே இவருடைய ஞானங்கள் எல்லோருக்கும் பிரயோஜனமாகும்படி பிரகாசமாவது நம்முடைய பாக்யமே.

உத்தரதேசத்தில் வித்யைக்குப் பெயர்போன காசி முதலிய மஹாநகரங்களில் வேதாந்த வாதங்கள் பிரபலமாக நேர்ந்த காலங்களில் அங்கே ஸஞ்சாரம் செய்து கொண்டிருந்த ஜகத்குருக்களான ஸ்ரீ உத்தராதிஸ்வாமிகளும், ஸ்ரீ பிரதிவாதி

பயங்கரம் ஸ்வாமியும் இவரை எழுந்தருளப்பண்ணி இவரைக் கொண்டு வாதங்கள் செய்விக்க, அங்கேயுள்ள எல்லாவித்த வான்களும் இவருடைய பாண்டித்யத்தைப் புகழ்ந்தது எல்லோருக்கும் பிரஸித்தம். ஈசாவாஸ்ய உபநிஷத்துக்கு வியாக்யானம் செய்கிறது என்கிற வியாஜத்தைக் கொண்டு எல்லா உபநிஷத்துக்களையும் அதிலும் முக்யமான சாந்தோக்யத்திலுள்ள ஸத்வித்யையையும் அபூர்வமாகவும் அத்புதமாகவும் அசும்பிதசரமாகவும் விசாரித்து இவர் ஒரு கிரந்தம் செய்திருக்கிறார். அது சீக்கிரத்தில் பிரசுரமாகும். ஆனால் அந்த கிரந்தம் வித்வான்கள் மட்டும் நன்றாய் அறியக்கூடியது. இந்த கிரந்தம் மிகத்தெளிவாக எல்லோரும் அறியும்படி தமிழில் எழுதியது. இதில் மூன்று மதங்களின் பிரமாணப்பிரமேயங்களை எளியநடையில் தெளிவாய் காட்டியிருக்கிறது. ஸ்ரீபாஷ்யம் ஸ்ரீநிவாஸனை முன்னிட்டுக்கொண்டு அவதரித்ததுபோல இவரும் வடமாமலையின் உச்சியை மேகமயமாகச் செய்யும் கிருஷ்ணமேகத்தினிடம் சாதகபக்ஷியின் விருத்தத்தை அவலம்பித்து இந்தக் கிரந்தத்தை செய்தருளியிருக்கிறார். விசிஷ்டாத்வைததரிசனத்திலுள்ள ஸம்பிரதாய பேதாம்சங்கள் ஒன்றையும் பாராட்டாமல் எல்லோருக்கும் பொதுவாக தரிசனம் விளக்கப்பட்டிருக்கின்றது. சுமார் 20 வருஷங்களுக்கு மேற்பட்ட காலமாக உடையவர் ஸம்பிரதாயங்களுக்குள் சொல்லிக்கொள்ளும் பேதங்களைப்பற்றி யாதொரு விவாதமும் கூடாதென்றும் எல்லோரும் கலந்து அநுபவிக்கவேண்டும் என்றும் இந்த ஸ்வாமி பல ஸதஸ்ஸுகளில் உறுதியாக ஸாதித்திருக்கிறார். அந்த ரீதியிலேயே இந்த கிரந்தம் செய்தருளப்பட்டது எல்லோருக்கும் ரஸ்யம்.

ஸ்ரீபாஷ்யபிரஸ்தானத்தில் இந்த ஸ்வாமி அநவரதமும் பரிச்ரமப்பட்டுக்கொண்டேயிருந்துவருவதால் இந்தக்கிரந்தத்தில் பல இடங்களில் ஸ்ரீபாஷ்யத்தின் பதங்களும் பாவங்களும் அப்படியே ஒத்திருப்பதைக் காணலாம். ஜகத்ஸத்யத்வ நிருபண ப்ரகரணத்தில் "கண்களுக்கெட்டாத அர்த்தங்களை ச்ருதி தானே சொல்லி தானே நிஷேதிக்கின்றதென்று சொன்னதாக ஆகும். இது பைத்தியக்காரனுடைய வியாபாரம் போலா

கும்'', என்று ஸாதித்திருப்பது, पुनस्तदेव नानुमत्तः प्रतिषेधति என்கிற ''ப்ரக்ருதைதாவத்'' ஸூத்திரத்தின் பாஷ்ய வாக்யமே ஆகும். 'அநந்தசப்தத்தின்' அர்த்தத்தை விளக்குகையில் வஸ்துபரிச்சேதம் இல்லை என்பதற்கு ''தனக்கு மேற்பட்ட ஒரு வஸ்து இல்லாமல் இருக்கையே ஒழிய மற்றொரு வஸ்து வேயில்லை என்னும்படி இருக்கை அன்று'' என்று ஸாதிக்கப் பட்டது. இரண்டு பிரகாரங்களாக வஸ்துவினால் அளவில் லாமை ஸித்தாந்தத்தில் உபபாதிக்கப்பட்டிருந்தாலும் ஸர்வ வஸ்து ஸாமானாதிகரண்யம் பொருந்தும் யோக்யதை என்கிற பிரகாரம் ந்யாயஸித்தாஞ்ஜன வியாக்யானத்தில் ஸாதித்த படி புத்தியில் நிச்சங்கமாக ஆரூடமாகாததாலும் இத்தனை குணந்தானுடையவன் என்று வஸ்துவின் உயர்த்தியை அளவிட இயலாது என்கிற பக்ஷத்தில் மற்றொரு பக்ஷமும் அடங்கிவிடு வதாலும் முதல் பக்ஷமே உயர்ந்தது என்பதைத் திருவுள்ளம் பற்றி ஸாதித்தது என்று கொள்ளவேண்டும். இங்கே இவ் வளவு குணந்தான் உள்ளவன் என்று வரையறுக்க இயலாமை என்கிற பக்ஷமே அநேகமாய் ச்லாக்யம். ஸ்வரூபத்தினாலும் குணத்தாலும் விபூதியாலும் மற்ற எந்த ஆகாரத்தினாலும் வேறெந்த வஸ்துவைக் காட்டிலும் தாழ்ந்ததாய் இருப்பது வஸ்துபரிச்சேதம் என்று ந்யாய ஸித்தாஞ்ஜனத்தில் நிஷ்கர் ஷமாய் அருளிச்செய்யப்பட்டது. 'எல்லாப்பொருள்களிலும் உட்புகுந்து உயிராக இருந்து ஸத்தையைக் கொடுத்து ஸ்திதி யையும் பிரவ்ருத்தியையும் நிர்வாஹம் செய்யும் மஹாகுணத் தால் தான் ஸர்வவஸ்து ஸாமாநாதிகரண்யத்தை ஸாதிக்க வேண்டுமாகையால் குணங்களினால் நிரதிசயமான ப்ரகர்ஷம் என்கிற பக்ஷம் அழகானது' என்று ''ஜந்மாத்யதிகரண'' ச்ருதப் காசிகை. 'ஸர்வ வஸ்துஸாமாநாதிகரணார்ஹத்வமும் இதில் அந்தர்கதம். ஸர்வசரீரகத்வம்தானே அது. அதுவும் நியமந, தாரண சேஷித்வங்களின் எல்லைதானே' என்று அங்கே அருளிச் செய்யப்பட்டது.

.''ஸ்வப்நத்தில் கண்ட வஸ்து தூங்கியெழுந்தபின், கண்ட தொழிய ஒன்றுமில்லை என்றும்......முதலிலுண்டான ஞானம் ப்ரமமாய் அதில் தோன்றிய வஸ்துவும் அஸத்யமாகின்றது'' என்று இங்கே ஜகத்ஸத்யத்வநிருபண ப்ரகரணத்தில் ஸாதிக்கப்

பட்டது அப்யுபகமவாதமென்று கொள்ளலாம். ஸ்ரீபாஷ்யத்தில் ஜிஜ்ஞாஸாதிகரணத்தில் அஸத்யமானதிலிருந்து ஸத்யத்திற்கு உத்பத்தியை நிரஸநம் செய்யுமிடத்து, 'ஸ்வப்நத்தில் ஏற்படும் புத்திகளுக்கு அஸத்யத்வம் இல்லை. அங்கே பார்க்கப் படும் விஷயங்கள்தானே பொய்யாகும். அந்த விஷயங்களுக் குள் தானே இல்லை என்கிற வாதம் காணப்படுகிறது. ஏற்பட்ட அறிவுகள் ஏற்படவில்லை என்று வாதமில்லையே' யென்று ஸாதித் தது அப்யுபகமாவாதத்தால் என்று ச்ருதப்ரகாசிகையில் ஸாதிக்கப்பட்டது. அப்யுபகமமாவது:—''பிறர் சொல்லு வதை யாம் வாஸ்தவத்தில் நம் மதத்தில் ஒப்புக்கொள்ளா விடினும் கக்ஷிக்காக பிறர் சொல்லுவதை ஒப்புக்கொண்டே சொல்லுவது.'' वैधर्म्याच्च न स्वप्नादिवत् என்கிற ஸூத்ரத்தில் ஸ்வப்நபதார்த்தங்கள் அஸத்யமென்று ஒப்புக்கொண்டு அப்யு பகமவாதமாகப் பேசப்படுகிறது என்று ச்ருதப்ரகாசிகையில் ஸாதிக்கப்பட்டது. காரணதோஷமும் பாதக ப்ரத்யயமும் ஸ்வாப்ந பதார்த்தங்களுக்கும் உள்ளதாகையால் அது பிராந்தி யாகும் என்று அங்கே தீபத்திலும் ஸாரத்திலும் ஸ்ரீபாஷ்யத் திலும் அருளிச் செய்யப்பட்டது. ஸூத்ரத்திலுள்ள சகாரத் தினுல் ஸ்வப்நபதார்த்தங்களும் அஸத்யமல்ல என்று பின்னுலே ஸ்வப்நாதிகரணத்தில் காட்டப் போவதாய் ஸூசிப் பதாக தீபத்தில் வ்யாக்யானம் செய்யப்பட்டது. ஸ்வப்நாதி கரணத்தின் அதிகரணஸாராவளியில்—

स्वप्नेऽर्थास्सन्तु सृष्टास्तदपि बहुविधा दुस्त्यजा भ्रान्तिरत्र
प्रध्वस्तानामिदानीन्तनवदनुभवात्स्थायितादिभ्रमाच्च ।
सत्यं श्रुत्यादिसिद्धे श्रुतिपरिहरणायोगतः सृष्टिमात्रं
स्वीकृत्यांशे तु बाधाद् भ्रममपि हि यथाजागरं न क्षिपामः ॥

ஸ்வப்நேர்த்தாஸ்ஸந்து ஸ்ருஷ்டாஸ்ததபி பஹுவிதா துஸ்த்யஜா ப்ராந் [திரத்ர
ப்ரத்வஸ்தாநாமிதாநீந்தனவதநுபவாத் ஸ்தாயிதாதிப்ரமாச்ச |
ஸத்யம் ச்ருத்யாதிஸித்தே ச்ருதிபரிஹரணாயோகத: ஸ்ருஷ்டிமாத்ரம்
ஸ்வீக்ருத்யாம்சே து பாதாத் ப்ரமமபி ஹி யதாஜாகரம் ந க்ஷிபாம: ||

என்கிற ச்லோகத்திலும் அதின் வியாக்யானசிந்தாமணியிலும் ஸ்வப்நபதார்த்தங்கள் பிராந்திஸித்தங்கள் ஒழிய உண்மையல்ல என்னும் பூர்வபக்ஷம் ஸத்யம் என்று பாதி அங்கீகாரம் செய்யப்பட்டது. லோகாநுபவத்தினுல் அவைகள் பொய் என்று தோன்றினுலும் ச்ருதியில் 'ஈச்வரன் ஸ்ருஷ்டிக்கிருன்' என்கிற ஸ்ருஷ்டி சப்தத்தால் அறிவிக்கப்படும் ஏதோ ஒரு விதமான அநிர்வாச்யமும் லோகவிஜாதியமும் நினைக்க நினைக்க கேவலம் ஆச்சர்யமயமும் ஒரு அஸ்திரமுமான இருப்பைக் கொள்ள வேண்டும். ஆனுல் அவைகள் இல்லை என்று பாதிக்கப்படுவதால் ஜாக்ரத்தசையில் பாதத்தால் பிராந்தி என்று கொள்வது போல இங்கேயும் பிராந்தித்வத்தை அங்கீகரிக்க வேண்டுமென்று சிந்தாமணி. 'ச்ருதி சொல்லுவதையும் ஸ்வப்நாதிகரண ஸூத்ரங்கள் சொல்லுவதையும் கொண்டு மட்டும் நாங்கள் அஸத்யமல்லவென்று லோக ப்ரதீதியையும் தள்ளிப் பேசுகிருேம்' என்று ச்ருத ப்ரகாசிகையில் காண்கிருேம். சததூஷணியில் 30-வது வாதத்தில் ஸ்வப்நத்தில் ஏற்படும் ப்ரமரூபமான ஞானம் ஸத்யமாகையாலும் அந்த ப்ராந்தி ஞானத்தினுல் சுபாசுபமான பலங்கள் ஸூசிதமாகையாலும் அதனுல் அஸத்யத்திலிருந்து ஸத்தியத்திற்கு உத்பத்தியென்பது ஸித்திக்காது. ஸ்வப்நபதார்த்தங்கள் ஈச்வர ஸ்ருஷ்டம் என்கிற பக்ஷத்தில் அவைகள் மித்யை என்பது ஸித்திக்காதாகையாலும் என்றும், ஸ்வப்நாதிகளிலும் பதார்த்தங்களைப் பார்ப்பது என்பது உள்ளது தானே. விஷயங்கள் மட்டுந்தானே யில்லை என்று பாதகப்ரத்யயம் உண்டாகிறது. எந்த இடத்தில் ஸ்வப்நத்தில் ஒரு பொருள் அறியப்படுகிறதோ அந்த இடத்தில் அது இருக்கிறது என்பதில்லையேயென்னில் அது உசிதமில்லை. அந்த காரணத்தினுல் பிராமாண்யம் மட்டுமே நிவ்ருத்திக்கும், அறிவுக்கு விஷயமானது போகாது என்றும் ஸாதிக்கப்பட்டது. இந்தக் கிரந்தத்தின் ஜகத்ஸத்யத்வ நிருபணப்ரகரணத்தின் கடைசி பாகத்தில்--''புராணங்களில் சொல்லப்படும் ஸ்வப்ந திருஷ்டாந்தத்திற்கு ஸ்வப்நத்தில் காணப்படும் வஸ்துக்கள் போல அஸ்திரமென்பது தாத்பர்யம்'' என்று அஸ்திரத்வாம்சத்தை ''மின்னின் நிலையில்'' என்கிற பிரகாரத்தினுல் காட்டப்பட்டது. வாசஸ்பதிமிச்ரரும் மித்யாத்

வம் என்று அவர்கள் சொல்வது அநித்யத்வம் என்று ஓரிடத்தில் கூறியிருக்கிறுர். அதை ஸ்ரீ ரங்கராமாநுஜ ஸ்வாமியும் எடுத்துக் காட்டியிருக்கிறுர். அப்படிக் கொள்ளில் ஒரு முக்ய மான பேதாம்சம் போய்விடும். இது மேற்கூறிய ப்ரகரணத்தின் ஆரம்பத்தில் ஸ்பஷ்டமாய் ஸாதிக்கப்பட்டிக்கிறது.

இந்தக் கிரந்தத்தை ஸேவித்துக் கொள்வதால் இந்த மதங்களின் முக்யமான அம்சங்களை எல்லோரும் எளிதில் தெரிந்து கொள்ளலாம்.

ஏ. வி. கோபாலாசாரியார்.



# முன்னுரை

இந்நூல் உருவத்தில் சிறியதாயினும் விஷயத்தில் பெரியது. இதன் பெருமையும் இதை இயற்றிய ஸ்ரீ உ. வே. கபிஸ்தலம் ஸ்வாமியின் பாண்டித்யமும் இதைப் படிப் போருக்கு நன்கு புலப்படும். இவ்விஷயத்தை முகவுரையில் ஸ்ரீ உ. வே. A. V. கோபாலாசாரியார் ஸ்வாமி நன்ருக விளக்கி யுள்ளார். இப்புத்தகம் வெகு வருஷங்களுக்கு முன் ப்ரசுரிக்கப் பட்டிருக்கிறது. இப்போது கிடைப்பதில்லே. இதற்கு ஸ்ரீ வங்கீ புரம் ரங்கஸ்வாமி அய்யங்கார் தெலுங்கு பாஷையில் எளியநடை யில் மொழிபெயர்ப்புச் செய்துள்ளார். தெலுங்கு தேசத்தவர் களும் இப்புத்தகத்திலுள்ள அரிய பெரிய விஷயங்களேயறிய வேண்டி அத்தெலுங்கு மொழிபெயர்ப்பை அச்சிட முன்வந்த திருமலே - திருப்பதி தேவஸ்தான அதிகாரிகள், அதற்கு மூல மான தமிழ் புத்தகமும் கிடைக்காததால் பல பேர்கள் கோரின தின்பேரில் அதையும் அச்சிட்டு ப்ரசுரிக்கின்றனர்.

த்வைதம், அத்வைதம், விசிஷ்டாத்வைதம் என்கிற மூன்று ஸித்தாந்தங்களின் ஸ்வரூபங்களேச் சுருக்கமாய் எல் லோரும் எளிதில் அறியும் வகையில் இந்நூல் அமைந்திருப் பதால் இதை ப்ரசாரத்திற்குக் கொண்டுவருவது மிகவும் லோ கோபகாரகமான கைங்கர்யம்.

இதை அச்சில் சரிபார்க்கும் கைங்கர்யம் அடியேனுக்கு கிடைத்தது ஒரு பாக்யமே. மிகவும் ஜாக்ரதையாய் சோதித்த போதிலும் ஏதாவது பிழைகள் நேர்ந்திருந்தால் அதைப் பெரியோர்கள் பொறுக்குமாறு வேண்டிக்கொள்கிறேன்.

இப்படிக்கு,

திருப்பதி 27-1-57 } கோழியாலம்-சடகோபாசாரியார்.

॥ श्रीः ॥

॥ श्रीनिवासपरब्रह्मणे नमः ॥

# ஸ்ரீ ஸித்தாந்த த்ரய ஸங்க்ரஹம்.

## श्रीसिद्धान्तत्रयसंग्रहः

आत्मीयनित्यनिरवद्यनितान्तहृद्यविद्योतमानवपुरुत्थमहःप्ररोहैः ।
मेघङ्करं वृषगिरेः शिखरं वितन्वन् देवो दयाजलनिधिर्दिशतु श्रियं नः ॥

ஆத்மீய நித்ய நிரவத்ய நிதாந்த ஹ்ருத்ய
வித்யோதமான வபுருத்த மஹ : ப்ரரோஹை :
மேகங்கரம் வ்ருஷகிரே : சிகரம் விதந்வந்
தேவோ தயாஜலநிதிர் திசது ஸ்ரியம் ந :

இதன் அர்த்தம் :—

'தன்னுடையதாய், எப்பொழுதும் தோஷலேசமில்லாததாய், மிகவும் அழகானதாய், விசேஷித்துப் ப்ரகாசித்துக் கொண்டிருக்கும் திருமேனியினின்றும் உண்டாயிருக்கிற காந்தியின் முளைக் குருத்துக்களால் திருமலையினுடைய சிகரத்தை, மேகத்தை உண்டாக்குவதாகச் செய்து கொண்டிருக்கிறவனையும், கருணைக் கடலாயுமிருக்கிற ஸ்ரீநிவாஸன் நமக்கு ஞானஸம்பத்தைக் கொடுப்பானாக.

தாத்பர்யம் :—

அநுபவிக்க அநுபவிக்க திருப்தியில்லாதபடி மேல் மேல் அநுபவத்தில் ஆசையையுண்டாக்கும் அழகையுடைய, நீர் கொண்ட மேகம் போன்ற தம்முடைய திருமேனி காந்திகளால் திருமலையின் சிகரத்தை மேகத்தால் வ்யாபிக்கப்பட்டது போல் செய்து கொண்டிருக்கும் ஸ்ரீநிவாஸன் நமக்கு க்ஞானஸம்பத்தைக் கொடுப்பானாக.

லோகோஜ்ஜீவனார்த்தமாக ஸர்வேச்வரன் ப்ரவர்த்திப்பித்த உபநிஷத்துக்களின் ஸித்தாந்தமாக அவ்வோவாதிகள் நிர்ணயித்த ஸித்தாந்தங்கள் பல உண்டு. அவைகளில் த்வைதம், அத்வைதம், விசிஷ்டாத்வைதம் என்று சொல்லப்படுகிற மூன்று ஸித்தாந்தங்கள் பிரசித்தமானவை. இந்த ஸித்தாந்த பேதங்கள் உண்டானதற்குக் காரணத்தை நிருபிக்கிறோம்.

## सिद्धान्तत्रयभेदहेतुनिरूपणम् ।

சாந்தோக்யோபநிஷத்தில் பிதா புத்ரனுக்கு உபதேசித்ததாகச் சொல்லியிருக்கும் "தத் த்வமஸி" வாக்யத்திற்கு நிர்வாஹம் சொல்லும் வழியின் பேதத்தால் இந்த ஸித்தாந்தபேதம் உண்டாயிற்று. இதுதான் பேதமுண்டானதற்கு முக்கிய காரணம். இந்த 'தத் த்வமஸி' வாக்கியத்திற்கு, ஒரு ஜிவாத்மாவைப் பார்த்து 'நீ அந்த ப்ரஹமம் தான்' என்று சொல்லுவதாய் அர்த்தம் ஆகிறது. வேறு சில ச்ருதிகளில் 'ஜீவன், வேறு ப்ரஹ்மம் வேறு' என்று சொல்லப்பட்டு இருக்கிறது. இந்த இரண்டு ச்ருதி வாக்கியங்களுக்கும் ஒன்றுக்கொன்று விரோதம் வருகிறது.

இதற்கு த்வைத ஸித்தாந்திகள் செய்யும் பரிஹாரம் :—

சாந்தோக்யத்தில் இந்த ப்ரகரணத்தில் 'தத் த்வமஸி' என்கிற வாக்கியத்திலுள்ள 'தத்' என்பதற்கு முன் 'ஆத்மா' என்றபதம் இருக்கிறது. இந்த இரண்டையும் சேர்த்தால் 'ஆத்மா-தத்' என்றாகிறது;

இந்த இடத்தில் 'ஆத்மா அதத்' என்று பிரித்தால், 'அதத் தவம்'—'நீ அந்த ப்ரஹ்மம் அன்று' என்று ஜீவனைப் பார்த்துச் சொன்னதாகிறது. ஆகையால் விரோதமில்லை.

[1]அதவா, ஒரு ராஜ்யத்தைக் காட்டி, இது ராஜாவின் அதீனம் என்று தெரிவிக்கைக்காக 'இதெல்லாம் ராஜா' என்று

1. अथवा:—அல்லது.

சொல்லுமாப்போலே, இங்கும், நீ ப்ரஹ்மத்திற்கு அதீனம் என்று தெரிவிப்பதற்காக 'நீ அந்த ப்ரஹ்மம்' என்று சொல்லுகிறது. ஆகையாலும் விரோதமில்லை என்று த்வைத-ஸித்தாந்திகள் நிர்வஹிப்பார்கள். இப்படி ஜீவ - ப்ரஹ்ம - பேதம் இந்த ச்ருதிக்கு அர்த்தமென்று சொல்லுகிறபடியால் இதற்கு 'த்வைத ஸித்தாந்தம்' என்று பெயர் வந்தது. த்வைதமாவது பேதம்.

இந்த நிர்வாஹத்தில், 'அதத்' என்று பதம் பிரிப்பதாலும், தததீனம் என்று [1] உபசாரோக்தியாக அர்த்தத்தை நிர்வஹிக்கிறபடியாலும் அஸ்வாரஸ்யம் வருகிறது. ஆகிலும் அநேக ச்ருதிகளோடு விரோதம் வாராமைக்காக இந்த அஸ்வாரஸ்யத்தை ஸஹிக்கவேண்டுமென்று இந்த ஸித்தாந்திகளின் அபிப்ராயம்.

## அத்வைதிகள் சொல்லும் பரிஹாரம் :—

ப்ரஹ்மம் என்று சொல்லப்படும் சைதன்யம் ஒன்றே மாயையிலும், மாயாகார்யமான அந்தஃகரணத்திலும் ப்ரதிபலிப்பதினால் ஈச்வரன் ஜீவன் என்கிற பேதம் ஏற்படுகிறது. இந்த ஜீவேச்வரஸ்வரூபத்தை விவேசித்தால் சைதன்யம் ஒன்றேயுள்ளது என்று கிடைக்கிறது. ப்ருஹதாரண்யகத்தில் ஈச்வரனைத் தொடங்கி 'ஸர்வமும் இவன் வசத்திலிருக்கிறது, எல்லாவற்றிற்கும் இவன் ஈச்வரன், இவன் பூதங்களுக்கெல்லாம் அதிபதி, பூதங்களைக் காப்பாற்றுகிறவன்' இது முதலான குணங்களைச் சொல்லி, 'இந்த ஆத்மா கீழ்ச் சொன்னபடியன்று, இவனிடத்தில் ஒன்றும் தட்டுவதில்லை' என்று கீழ்ச் சொன்ன குணங்களை யெல்லாம் கழிக்கிறபடியால் ஒரு குணமுமில்லாத சுத்த சைதன்யமொன்றே பரமார்த்தம் என்று ஈச்வர - ஸ்வரூபத்தை விவேசித்தால் கிடைக்கிறது.

ஜீவனாவது - ஜாக்ரத், ஸ்வப்ன, ஸுஷுப்தி என்கிற மூன்றவஸ்தைகளையும் மாறி மாறி அடைபவன். இதில் ஜாக்ர

---

1. उपचारोक्ति:—முக்கியமான அர்த்தத்தைவிட்டு வேறு அர்த்தம் சொல்வது.

தவஸ்தையாவது - கண் முதலிய இந்த்ரியங்களைக் கொண்டு வெளியிலிருக்கும் வஸ்துக்களை அனுபவிக்கை. ஸ்வப்நவஸ்தையாவது-ஜாக்ர தனுபவம் கழிந்து, அந்த அனுபவத்தாலுண்டான வாஸனாரூபமான பதார்த்தங்களை அனுபவிக்கை, ஸுஷுப்தியாவது - அந்த அனுபவமும் கழிந்து கேவலம் அஜ்ஞானானுபவம். இந்த மூன்றவஸ்தைகளில், ஜாக்ரதவஸ்தையில் காணப்பட்ட பதார்த்தங்கள் ஸ்வப்நவஸ்தையில் தென்படாமல் கழிந்து போகின்றன. ஸ்வப்நவஸ்தையில் கண்டவை ஸுஷுப்த்யவஸ்தையில் தென்படாமல் போகின்றன. இப்படிக் கழிந்து போவதால் [1]பாஹ்ய - ப்ரபஞ்சமும், ஸ்வாப்ன-ப்ரபஞ்சமும் வாஸ்தவமன்று. இரண்டவஸ்தைகளிலும் 'நான்' 'நான்' என்று தோன்றுவது அந்தஃகரணத்தில் ப்ரதிபலிக்கும் சைதன்யம். ஸுஷுப்த்யவஸ்தையில் அஜ்ஞான மாத்திரத்திற்கு அனுபவம் வந்து அந்தஃகரணமும் கழிந்து போகிறது. யோகதசையில் அஜ்ஞானமும் தோன்றாமல் சைதன்யம் மாத்திரம் தோன்றுகிறபடியால் அஜ்ஞானமும் கழிந்து போகிறது. ஆகையால் சைதன்யமொன்றே வாஸ்தவமாயுள்ளது.

இந்தச் சைதன்யத்திற்கு அநாதிகாலம் தொடங்கி அஜ்ஞான ஸம்பந்தம் நேர்ந்திருக்கிறது. அந்த அஜ்ஞானம் அந்தஃகரணமாய் மாறுகிறது. அந்த அந்தஃகரணம் ஸ்வாப்னப்ரபஞ்சம், பாஹ்ய - ப்ரபஞ்சம் ஆகிற விகாரங்களை அடைகிறது. ஆகையால் அஜ்ஞானமும், அந்தஃகாரணமும், ஸ்வாப்ன-ப்ரபஞ்சமும் ஜாக்ரத்-ப்ரபஞ்சமும் மித்யையாய் முடிகிறது. சைதன்யம் மாத்ரம் சேஷிக்கிறது. இதுதான் ஜீவனுடைய விவேசன ப்ரகாரம். இந்த விவேசனத்திற்காகத்தான் ப்ருஹதாரண்யகம் மாண்டுக்யம் முதலான உபநிஷத்துக்கள் ஜாக்ரத் முதலான அவஸ்தாத்ரயத்தை நிரூபிக்கின்றன.

இப்படி ஜீவாத்மாவை விவேசித்தால் சேஷித்த சுத்தசைதன்யம் 'த்வம்' பதத்திற்கு அர்த்தம். ஈச்வர ஸ்வரூபத்தை விவேசித்ததில் சேஷித்த சுத்த சைதன்யம் 'தத்'

---

1. वाह्यप्रपञ्चः—வெளி உலகம்.

பதத்திற்கு அர்த்தம். ஆகையால் 'தத்' 'தவம்' பதங்களிரண்டும் சுத்த சைதன்ய ஸ்வரூபம் ஒன்று என்று காட்டுகின்றன.

இங்கே 'தத்' 'த்வம்' என்கிற பதங்களுக்கு சுத்தசைதன்யம் பொருள் என்று சொல்வதில் அஸ்வாரஸ்யம் வருகிறது. ஆகிலும் 'தத் த்வமஸி' என்கிற உபதேச ஸ்வாரஸ்யத்தால் பிதா புத்ரனுக்கு ப்ரத்யக்ஷாதிகளாலே அறிய முடியாததான ப்ரஹ்மாத்ம-ஐக்யத்தை உபதேசிப்பதற்காகத் தொடங்குகிறார் என்று தெரிகிறது. ஒன்பது [1]பர்யாயம் இவ்விதம் உபதேசிப்பதாலும், இவ்வர்த்தம் ப்ரத்யக்ஷாதிகளாலே கிடைக்காததாகையாலும், இப்படி அறிந்தவனுக்கு மோக்ஷ பலம் சொல்லுகையாலும், பிதா - புத்ர - ஸம்வாத - ரூபமான[2] அர்த்தவாதம் காண்கையாலும், இங்கேயுள்ள 'தத், த்வம்' பதங்களின் அர்த்தத்தை சோதிப்பதற்காக ப்ரவ்ருத்தித்த ப்ருஹதாரண்யகம் முதலிய உபநிஷத்துக்களினுடைய சில ப்ரகரணங்களில் ஜீவனுக்கும் ஈச்வரனுக்கும் சொல்லிய குணங்கள் கல்பிதங்கள் என்று கழித்துச் சைதன்யத்தின் ஐக்யத்தை உபபாதிக்கையாலும், இந்த 'தத் த்வம்' என்கிற உபதேசத்திற்கு சுத்த - சைதன்ய - ஐக்யத்திலேயே நோக்கு என்று கிடைக்கிறது. ஆகையால் இத்த அஸ்வாரஸ்யம் ஒப்புக்கொள்ள வேண்டுமென்று அத்வைத ஸித்தாந்திகளின் அபிப்ராயம்.

சுத்த - ஜீவ - சைதன்யத்திற்கு, சுத்த - ப்ரஹ்ம - சைதன்யத்திற்கும் அபேதம் இந்த 'தத் த்வமஸி' ச்ருதிக்கு அர்த்தமென்று நிர்வஹிக்கிறபடியால் இதற்கு 'சுத்தாத்வைத ஸித்தாந்தம்' என்று பெயர் வந்தது.

## விசிஷ்டாத்வைதிகள் சொல்லும் பரிஹாரம் :—

ஜாக்ரத் - தசையில காணப்படும் வஸ்துக்கள் ஸ்வப்னாவஸ்தையில் காணப்படாதது மாத்திரத்தைக் கொண்டு அவை

---

1. पर्याय:—தடவை.
2. अर्थवाद:—ஒரு விஷயத்தை நிரூபிப்பதற்காகச் சொல்லப்படும் சிறிய கதை.

யில்லை என்று சொல்வது அநுபபன்னம். ஸ்வப்னவஸ்தையில் கண் முதலிய இந்த்ரியங்களுக்கு வெளியில் பரவுதல் இல்லாமையால் வெளியிலிருக்கும் வஸ்துக்கள் தென்படவில்லை. தென்படாத - மாத்திரத்தைக் கொண்டு ப்ரபஞ்சம் இல்லை என்று சொல்லக் கூடாது. ப்ரபஞ்சம் ஸத்யமானதுதான். ஆகையால் யதார்த்தமாயும் விசித்திரமாயும் பலவகைப்பட்டதுமான இந்த ப்ரபஞ்சத்தை ஸ்ருஷ்டிக்கைக்கு வேண்டிய ஸர்வஜ்ஞத்வம் ஸர்வ சக்தித்வம் ஸத்ய ஸங்கல்பத்வம் முதலான குணங்களை ப்ரஹ்மத்திற்குப் பரமார்த்தமாய் ஒப்புக்கொள்ளவேண்டுமாகையாலும், ப்ரஹமத்திற்கு ஸர்வஜ்ஞத்வாதி குணங்களை ச்ருதி தானே நிஷேதிக்கிறது என்பது உன்மத்த - வ்யவஹாரம்போல் ஆகுமாகையாலும் ப்ரஹ்மத்தின் குணங்கள் அபரமார்த்தமென்று சொல்லுவது கூடாது. அந்தக் குணங்கள் எல்லாம் ஸ்வாபாவிகம் என்று ச்ருதி சொல்லுகிறது.

ஜீவாத்மா இந்த ஸம்ஸாரத்தில் அகப்பட்டுக் கொண்டு அனேக வித துக்கங்களை அனுபவித்துக் கொண்டு, ப்ரஹ்மத்தையுபாஸித்து, அதனால் துக்கங்களைக் கழித்துக் கொள்ளுகிறான் என்றும் ச்ருதி சொல்லுகிறது. இப்படித் தன் துக்கத்தைக் கழித்துக் கொள்ள ஞானசக்திகளில்லாமல், அல்பஜ்ஞனாய், அல்ப-சக்திகனாய், ஸத்ய ஸங்கல்பனல்லாதவனாய், துக்கங்களில் மூழ்கிக் கிடக்கும் ஜீவாத்மாவுக்கும், எப்பொழுதும் ஸர்வஜ்ஞமாய், ஸர்வ - சக்தியாய், ஸத்ய - ஸங்கல்பமாய், ஒருக்காலும் துக்கலேசமுமில்லாததுமான ப்ரஹ்மத்திற்கும் ஸ்வரூபைக்யம் மின்மினிப் பூச்சிக்கும் ஸூர்யனுக்கும் ஸ்வரூபைக்யம் போல் அஸம்பாவிதமாகையால், 'தத் த்வமஸி' வாக்கியத்திற்குக்கீழ்ச் சொன்ன நிர்வாஹம் உபபன்னமாகாது. ஆகையால் இந்த ச்ருதிக்கு வேறு விதமாக நிர்வாஹம் சொல்ல வேண்டும்.

''ப்ரஹ்மம் 'நான் பஹுவாகக் கடவேன்' என்று ஸங்கல்பித்து, ஜகத்தை ஸ்ருஷ்டித்தது'' என்று பல ச்ருதிகள் சொல்லுகையாலும் 'ப்ரஹ்மம் தன்னைத் தானே செய்தது' என்று தைத்திரீயத்தில் ஸ்ருஷ்டிப்ரகரணத்தில் சொல்லியிருப்பதாலும், ப்ரஹ்மமே பஹுவாக ஆயிற்று என்று கிடைக்கிறது. நிர்விகாரமான ப்ரஹ்மத்திற்கு நேராக பஹுவாக ஆசை அநுபபன்னம்

ஆகையால் இதற்கு உபபத்தி வருவது எப்படி என்று விசாரிக்கும் போது, ப்ரஹ்மத்திற்கு ப்ரபஞ்சமெல்லாம் சரீரமென்று ப்ருஹதாரண்யகத்தில் சொல்லியிருப்பதாலும்.

[1]"सोभिध्याय शरीरात् स्वात् सिसृक्षुः विविधाः प्रजाः। अप एव ससर्जादौ...."

என்று மனுஸ்ம்ருதியில் ப்ரஹ்மம் தன்னுடைய சரீரத்திலிருந்து ப்ரபஞ்சத்தை ஸ்ருஷ்டித்தது என்று சொல்லியிருப்பதாலும், ப்ரஹ்மத்தினுடைய சரீரம் ப்ரபஞ்சமாகப் பரிணமிக்கிறது என்றும், ப்ரஹ்மத்திற்குத் தன் சரீரமான ப்ரபஞ்சத்தின் வழியாய் [2]'பஹு - பவனம்' என்றும் கிடைப்பதால் ப்ரஹ்மமே காரணம், ப்ரஹ்மமே கார்யம் என்று கிடைக்கிறது. ப்ரஹ்மத்திற்கு சரீரமான ப்ரபஞ்சத்தில் வரும் நாம - ரூபங்களை யடைந்திருக்கையாகிற ஸ்தூலாவஸ்தை ப்ரஹ்மத்திற்குக் கார்யாவஸ்தை என்றும், அந்த நாம - ரூப - விபாகமில்லாமையாகிற ஸூக்ஷ்மாவஸ்தை ப்ரஹ்மத்திற்குக் காரணவஸ்தை என்றும் ஏற்படுகிறது, ஆகையால் ஸூக்ஷ்ம - சித்-அசித் விசிஷ்ட — ப்ரஹ்மம் காரணமென்றும், ஸ்தூல - சித - சித் - விசிஷ்ட பிரஹ்மம் கார்யமென்றும் கிடைக்கிறது. இந்த அர்த்தத்தைத் தான் சாந்தோக்யோபநிஷத்தில் பிதா தன் புத்ரனுக்குக் காரணத்தை உபதேசிக்கத் தொடங்கி 'தத் த்வமஸி' என்கிற வாக்கியத்தால் ஸூக்ஷ்ம - சிதசித் - விசிஷ்டமான ப்ரஹ்மம் தான் ஸ்தூல - சிதசித் - விசிஷ்ட - ப்ரஹ்மமாயிருக்கிறது என்று சொன்னாரென்று சொல்லுகிறது. இதில் ஒரு அநுபபத்தியுமில்லை.

ஆனால் 'த்வம்' பதம் ஒரு சரீரவிசேஷத்தோடு கூடியிருக்கும் சேதனனைச் சொல்லுகிறதாக லோக வ்யவஹாரத்தால் கிடைத்தாலும், அந்த சரீரத்தோடு கூடின சேதன - விசிஷ்ட - ப்ரஹ்மத்தைச் என்பது லோக வ்யவஹாரத்

---

1. "ஸோ பித்யாய சரீராத் ஸ்வாத் ஸிஸ்ருக்ஷுஃ விவிதாஃ ப்ரஜாஃ| அப ஏவ ஸஸர்ஜாதௌ......"

2. बहुभवनं— பலவாக ஆகுகை.

தால் கிடைப்பதில்லை. இங்கு அந்த அர்த்தம் கொள்வதில் அஸ்வாரஸ்யம் வருகிறது. அப்படியே 'த்வம்' பதம் ப்ரஹ்மத்தைச் சொல்லுகிறது என்று ஒப்புக் கொண்டால் 'அஸி' என்கிற [1]மத்தியம புருஷன் அநுபபன்னமாகிறது என்றும் சங்கிக்கலாம்.

சரீரத்தைச் சொல்லும் பதங்கள் அந்த சரீரத்திற்கு ஆத்மாவையும் சொல்வதை தேவன் மனுஷ்யன் முதலிய பதங்களிலே கண்டிருக்கிறோம். அப்படியே ப்ரஹ்மத்திற்கு சரீரமான ஜீவனைச் சொல்லும் 'த்வம்' பதம் ஜீவனுக்கு ஆத்மாவான ப்ரஹ்மத்தையும் சொல்லுவதில் ஒரு அஸ்வாரஸ்யமும் கிடையாது. [2]'யுஷ்மத்' சப்தத்தோடு சேர்த்துச் சொல்லும் போது [3]தாதுவுக்கு மத்யம புருஷன் வரும் என்று வ்யாகரண - சாஸ்த்ரத்தில் சொல்லியிருப்பதால், இங்கே 'த்வம்' பதத்தோடு சேர்த்துச் சொல்லப்படும் 'ஆஸ்' தாதுவுக்கு [4]'அஸி' என்கிற மத்யம புருஷன் அநுபபன்னம் அன்று. இதுதான் 'தத் த்வமஸி வாக்கியத்திற்கு ஸ்வரஸார்த்தம் என்று விசிஷ்டாத்வைத - ஸித்தாந்திகளின் அபிப்பிராயம்.

இபபடிக் காரணாவஸ்தா-விசிஷ்ட-ப்ரமத்திற்கும், கார்யாவஸ்தா - விசிஷ்ட - ப்ரஹ்மத்திற்கும் ஐக்யம் 'தத் த்வமஸி' வாக்கியத்திற்கு அர்த்தம் என்று சொல்லுகிறபடியால் இதற்கு விசிஷ்டாத்வைத - ஸித்தாந்தமென்று பெயர் வந்தது.

இப்படி 'தத் த்வமஸி' வாக்கியத்தில் நிர்வாஹ - ப்ரகார-பேதத்தைக் கொண்டு இந்த ஸித்தாந்த பேதம் ஏற்பட்டது.

ஸித்தாந்த த்ரய பேத ஹேது நிருபணம் முடிந்தது

---

1. मध्यमपुरुष—முன்னிலை.
2. युष्मत्—(சப்தத்தோடு)—முன்னிலைப் பெயரான 'நீ' என்பதோடு. 3. धातु—பகுதி. 4. असि—இருக்கிறாய்.

|| श्रीः ||

|| श्रीनिवासपरब्रह्मणे नमः ||

# ஸ்ரீ ஸித்தாந்த த்ரய ஸங்க்ரஹம்

## ॥ श्री सिद्धान्तत्रयसंग्रहः ॥

## ( 1. த்வைத ஸித்தாந்த ப்ரகரணம் )

## ॥ द्वैतसिद्धान्तप्रकरणम् ॥



श्रीमन्मध्वमते हरिः परतरः सत्यं जगतत्त्वतो
भिन्ना जीवगणा हरेरनुचरा नीचोच्चभावं गताः ।
मुक्तिर्नैजसुखानुभूतिरमला भक्तिश्च तत्साधनं
ह्यक्षादित्रितयं प्रमाणमखिलाम्नायैकवेद्यो हरिः ॥

ஸ்ரீமந் மத்வ மதே ஹரிః பரதர ஸத்யம் ஜகத் தத்வதோ
பிந்நா ஜீவகணு ஹரோநுசரா நீசோச்சபாவம் கதாः।
முக்திர் நைஜ ஸுகாநுபூதிः அமலா பக்திச்ச தத்ஸாதனம்
ஹ்யக்ஷாதித்ரிதயம் ப்ரமாணமகிலாம்நாயைகவேத்யோ ஹரிः॥

[பதவுரை:—श्रीमन्मध्वमते = ஸ்ரீமத்வாசாரியர் மதத்தில்; हरिः = ஸ்ரீமஹாவிஷ்ணு; परतरः = எல்லோரிலும் உயர்ந்தவர்; जगत् = சராசர ரூபமான ப்ரபஞ்சம்; सत्यं = உண்மையானது; तत्त्वत = வாஸ்தவத்தில்; जीवगणाः ஜீவாத்ம கணங்கள்; भिन्नाः = ஒருவருக்கொருவர் வேறுபட்டவர்கள் (ஈச்வரனைக் காட்டிலும் கூட வேறுபட்டவர்கள்); हरेः = ஸ்ரீமஹாவிஷ்ணுவுக்கு; अनुचराः = ஸேவகர்கள்; नीचोच्चभावं = ஏற்றத்தாழ்வை; गताः = அடைந்தவர்கள்; मुक्तिः = மோக்ஷமாவது; नैजसुखानुभूतिः =

ஸ்வரூபானந்தானுபவம்; अमला भक्तिः = நிர்மலமான பக்தி; तत्साधनं = அந்த மோக்ஷத்திற்கு உபாயம்; अक्षादित्रितयं = ப்ரத்யக்ஷம், அநுமானம் ஆகமம் என்கிற மூன்றும்; प्रमाणं = வஸ்துக்களையறிய ப்ரமாணங்கள்; हरिः = ஸ்ரீ மஹாவிஷ்ணுவே; अखिलाम्नायैकवेद्यः = ஸர்வ வேதங்களாலும் அறியத்தக்கவன்.]

மேற்படி ஸித்தாந்த ப்ரவர்த்தகர் – ஸ்ரீ ஆனந்த தீர்த்தர் கூறியதாவது :—

ஸ்ரீ மஹாவிஷ்ணு எல்லாவற்றைக் காட்டிலும் மேற்பட்டவன். இவனிடத்தில் எல்லா குணங்களும் நிறைந்திருக்கின்றன; அக்ஞானம் முதலிய ஒருவித தோஷமும் கிடையாது. ஆகையால் இவனுக்கு ஸர்வோத்தமத்வம் ஏற்பட்டிருக்கிறது. இவன்தான் ஜகதீச்வரன்; இவன்தான் பரப்ரஹ்மம். இவன் ஜகத்தினுடைய ஸ்ருஷ்டி முதலான காரியங்களைச் செய்கிறான். அவையாவன - ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், நியமனம், ஞானம், அஞ்ஞானம், பந்தம், மோக்ஷம். இவன் ஸர்வஜ்ஞன். ஜகத்திலுள்ள ஸர்வ பதார்த்தங்களைச் சொல்லும் சப்தங்களால் மஹாயோக வ்ருத்தியைக் கொண்டு அவனே சொல்லப்படுகிறான். மஹாயோக வ்ருத்தியாவது சப்தத்தின் பூர்ணமான அவயவ சக்தி விசேஷம்.

இவனுக்கு அப்ராக்ருதமாய் நித்யமான ஒரு சரீரமுண்டு. இந்த சரீரத்தில் பாதம் முதல் தலையளவான ஸர்வாவயவங்களும் ஞானானந்தாத்மகமாயிருக்கிறது. இதில் கண், காது முதலான எல்லா இந்திரியங்களும் நித்யமாயுண்டு. ஒவ்வொரு இந்திரியமும் தனித் தனியே ரூபம் ரஸம் முதலிய எல்லாவற்றையும் க்ரஹிக்க ஸாமர்த்யமுள்ளது. இந்த விக்ரஹமும், இதன் அவயவங்களும் இவன் ஸ்வரூபத்தைக் காட்டிலும் வேறுபட்டவையன்று. இவன் ஒருவன் தான் ஸர்வத்திலும் ஸ்வதந்த்ரன்.

இவன் வாஸுதேவன், ஸங்கர்ஷணன், ப்ரத்யும்நன், அநிருத்தன் என்றும், மத்ஸ்யம் - கூர்மம் முதலானது, கேசவன் முதலானதுமான அநேக ரூபங்களுள்ளவன். எல்லா ரூபங்களும்

ஞானநந்தாதி குணங்களால் நிறைந்தவைகள். அளவிட முடியாதவைகள். இவனிடத்திலிருக்கும் ஞானநந்தாதி குணங்கள் க்ரியைகள், ரூபரஸாதிகள் எல்லாம் ஸ்வரூபத்தைக் காட்டிலும் வேறுபட்டவையன்று.

இவனுக்கு லக்ஷ்மி என்று ஒரு பத்னியுண்டு. இவள் பரமாத்மாவைக் காட்டிலும் வேறுபட்டவள். இவனொருவனுக்கு மாத்திரம் ஆதீனப்பட்டவள். இவனைக் காட்டிலும் ஞானநந்தாதிகளால் குறைந்தவள். இவள் தான் பகவானுக்கு அடுத்தவள். ஜீவாத்மாக்களெல்லாம் இவளுக்குத் தாழ்ந்தவர்கள். பரமாத்மாவுக்குப் போலவே அவளுக்கும் ஞானனந்தரூபமாய் அப்ராக்ருதமான சரீரமுண்டு. அநேக ரூபங்களுமுண்டு. அஜ்ஞானாதி தோஷங்கள் கிடையாது. இவளும் பரமாத்மாவைப் போலவே மஹாயோக வ்ருத்தியால் எல்லா சப்தங்களாலும் சொல்லப்படுகிறாள். அவளும் ஸர்வ தேசத்தில் வ்யாபித்திருக்கிறாள்.

இவர்களிருவர்தான் நித்ய முக்தர். ஜீவாத்மாக்களில் நித்ய முக்தர் கிடையாது. எல்லோருமே ஸம்ஸாரத்திலிருந்து முக்தி அடைகிறவர்கள். இந்த ச்லோகத்தில் "ஹரி: பரதர: என்கிற வித்தால் எல்லா ஜீவர்களைக் காட்டிலும் லக்ஷ்மி மேற்பட்டவள் என்றும், இவளைக் காட்டிலும் விஷ்ணு மேற்பட்டவன் என்றும் ஸூசிப்பிக்கப்படுகிறது. சராசர ரூபமான ஸகல ப்ரபஞ்சமும் உண்மையாயுள்ளது; அஸத்யமன்று. ஜீவாத்மாக்கள் பரமாத்மாவைக் காட்டிலும் ஒருவருக்கொருவரும் வேறுபட்டவர்கள். இவர்கள் ஸ்த்ரீ ஜாதி பும் ஜாதி என்று இரு வகைப்பட்டவர்கள். புருஷ ஜாதியைச் சேர்ந்தவர்கள் ஸம்ஸாரதசையில் கர்மத்தால் ஸ்த்ரீசரீரத்தை யடைந்தாலும் மோக்ஷத்தில் புருஷ ஜாதீயராகவே இருப்பார்கள். ஸ்த்ரீ ஜாதீயர், ஸம்ஸார தசையிலும் மோக்ஷ தசையிலும் ஸ்த்ரீ ஜாதீயராகவே இருப்பார்கள்.

இஜ்ஜீவர்கள் முக்தியோக்யர், நித்ய ஸம்ஸாரிகள், தமோயோக்யர் என்று மூன்று வகைப்பட்டிருப்பார்கள். இவர்களில் முக்தி யோக்யர் தேவ கணம், ரிஷ கணம், பித்ரு கணம், சக்ரவர்த்தி கணம், மனுஷ்யோத்தம கணம் என்று ஐந்து வகை

யினர். அந்தந்த கணத்தைச் சேர்ந்தவர்களுக்கு அந்தந்த ஸ்தானத்தை அடைய யோக்கியதை யுண்டு. ப்ரஹ்மா, வாயு முதலானவர் தேவ கணங்கள்; நாரதர் முதலியவர் ரிஷி கணங்கள்; சிராதிகள் பித்ரு கணங்கள்; ரகு அம்பரீஷன் முதலியோர் சக்ர வர்த்தி கணங்கள்

மனுஷ்யோத்தமர்கள் த்ருண ஜீவர், தத் வ்யதிரிக்த ஜீவர் என்று இருவகைப்பட்டிருப்பார்கள். த்ருணஜீவர் ப்ரஹ்மத்தின் 'ஆத்மா' என்கிற ஒரு குணத்தை உபாஸிக்கிறவர்கள். இவர்கள் அபரோக்ஷ ஞானம் பிறந்த பிறகு தேஹநாசாநந்தரம் இங்கேயே முக்தியை அடைகிறார்கள். த்ருண ஜீவரைக் காட்டிலும் வேறுபட்ட மனுஷ்யோத்தமர் ப்ரஹ்மத்தின் ஸத், சித், ஆநந்தம், ஆத்மா என்கிற நான்கு குணங்களை உபாஸிப்பார்கள். இந்த முக்தியோக்கியர்கள் மோக்ஷ ஸாதனானுஷ்டானத்தால் மோக்ஷத்தை அடைய யோக்கியதை யுடையவர்கள். இவர்கள் ஸதாசாரம், பகவத் பக்தி முதலான நல்ல குணங்களை யுடையவராயிருப்பார்கள். இவர்களில் சிலருக்கு சில காலத்தில் துர்க்குணம் உண்டாவது அஸுராவேசத்தாலே.

எப்போதும் ஸுக துக்கங்களைக் கலந்து அனுபவிப்பவர்கள் நித்ய ஸம்ஸாரிகள். இவர்கள் புண்ய கர்மங்களால் ஸ்வர்க்கம் போவதும், பாப - கர்மங்களால் நரகம் போவதும். பூலோகத்திற்கு வருவதுமாக சுற்றிக்கொண்டே யிருப்பார்கள்.

தமோயோக்யர்—தைத்யர், அஸுரர், பிசாசர், மனுஷ்யாதமர் என்று நான்கு விதம். இவர்கள் முடிவில் நித்யமான நரகத்திலேயே விழுந்து விடுவார்கள். இவர்கள் பகவானிடத்திலும் பகவத் பக்தர்களிடத்திலும் த்வேஷம், துராசாரம் முதலான துர்க்குணங்களை யுடையவராயிருப்பார்கள்.

ஜீவாத்மாக்கள் எல்லாரும் ஞானானந்த ஸ்வரூபர்கள். மிகவும் அணு பரிமாணமுடையவர்கள். பகவானுக்குக் கிங்கரர்கள். முக்தி யோக்ய ஜீவர்களில் ஸ்தாவர ஜீவர்களைக் காட்டி

லும் பசு பக்ஷ்யாதி ஜங்கம ஜீவர்கள் பக்தி, பகவத் ப்ரியத்வங் களிலும், அதன் மூலமாக மோக்ஷ தசையில் வரும் ஆநந்தானு பவத்திலும் மேற்பட்டவர்கள். இவர்களைக் காட்டிலும் மனுஷ் யர் உத்தமர்; இவர்களைவிட ப்ராஹ்மண மனுஷ்யர் உத்தமர்; இவர்களைக் காட்டிலும் சக்ரவர்த்திகள் நூறு பங்கு குணாதி கர். சக்ரவர்த்திகளைக் காட்டிலும் மனுஷ்ய கந்தருவர் நூறு பங்கு குணாதிகர்கள். இப்படியே மேல் மேல் சதுருமுக ப்ரஹ்ம பர்யந்தமான ஜீவர்கள் ஞானாதிகளில் தாரதம்ய முள்ளவர்கள். இந்தத் தாரதம்யம் இந்த ஸித்தாந்தத்திற்கு முக்யாம்சம்.

மோக்ஷமாவது ஸ்வரூபாநந்தானுபவம். இந்த அனுபவம் ஸம்ஸார தசையில் கர்மத்தாலுண்டான ப்ராக்ருத தேஹ ஸம் பந்தத்தால் தடைபட்டு பகவதனுக்ரஹத்தால் மோக்ஷ தசை யில் இந்தத்தடை நீங்கிய பிறகு வைகுண்டலோகத்தில் வரும். இதில் ஜீவர்களில் அவரவர்கள் யோக்யதைக்குத் தக்கபடி சில ருக்கு ஸாலோக்யமும், சிலருக்கு ஸாமீப்யமும், சிலருக்கு ஸாரூப்யமும் சிலருக்கு ஸாயுஜ்யமும் வரும்.

ஸாலோக்யமாவது :— வைகுண்ட லோகத்தில் எங்கே யாவது இருந்து யதேஷ்டமான போகத்தை அனுபவிப்பது. ஸாமீப்யமாவது:—பகவத் ஸமீபத்திலிருந்து யதேஷ்டமான போகத்தை அனுபவிப்பது. ஸாரூப்யமாவது:—பகவானைப் போல் நான்கு கைகள், சங்கு, சக்கரம் முதலியவைகளை யுடை யவர்களாய் யதேஷ்டமாய் போகத்தை அனுபவிப்பது. ஸாயுஜ் யமாவது:—பகவானுடைய சரீரத்தில் ப்ரவேசித்து யதேஷ்ட போகத்தை அனுபவிப்பது. இப்படி முக்தர்கள் எல்லாரும் தாரதம்யமுள்ளவர்களாயிருப்பார்கள்.

இந்த மோக்ஷத்திற்கு பக்தியோடு கூடின பகவதுபாஸனம் ஸாதனம். இந்த உபாஸனம் மனுஷ்யோத்தமகணம் முதல் ப்ரஹ்மகணம் வரையில் ஏக குணோபாஸனம், சதுர்குணோபா ஸனம், அநேககுணோபாஸனம் என்று பஹுவித தாரதம்யத் தோடு கூடியதாயிருக்கும்.

ப்ரத்யக்ஷம், அநுமானம், ஆகமம் என்றும் இவை மூன்றும் வஸ்துக்களை அறிவதற்கு ஸாதனமான ப்ரமாணங்கள். ஸர்வ வேதங்களுக்குப் பொருள் பர ப்ரஹ்மமே என்று இந்த ஸித்தாந்தத்தில் ஒப்புக் கொள்ளப்படுகிறது.

இந்த ஸித்தாந்தத்தில் ஜீவ - ப்ரஹ்மங்களுக்கு ஸ்வரூப பேதம் ஒப்புக் கொள்ளுகிறபடியால் இது த்வைதஸித்தாந்தம் என்று சொல்லப்படுகிறது.

த்வைத ஸித்தாந்த ப்ரகரணம் முடிந்தது



|| श्रीः ||

|| श्रीनिवासपरब्रह्मणे नमः ||

# ஸ்ரீ ஸித்தாந்த த்ரய ஸங்க்ரஹம்.

|| श्री सिद्धान्तत्रयसंग्रहः ||

## 2. அத்வைத ஸித்தாந்த ப்ரகரணம்.

|| अद्वैतसिद्धान्तप्रकरणम् ||

---

ब्रह्मैकं परमार्थसत्तदितरन्मायामयत्वान्मृषा
ब्रह्मैवैकमुपाधिबिम्बितमातो जीवेशभावं गतम् ।
भ्रान्तिस्संसृतिरस्य तत्प्रशमनं मुक्तिस्तदप्यात्मनो
ब्रह्मैक्यावगमाच्छ्रुति श्रवणजादित्याहुरद्वैतिनः ॥

ப்ரஹ்மைகம் பரமார்த்தஸத் ததிதரன் மாயா மயத்வான் ம்ருஷா
ப்ரஹ்மைவைக முபாதி பிம்பித மதோ ஜீவேசபாவம் கதம் ।
ப்ராந்திஸ் ஸம்ஸ்ருதி ரஸ்ய தத் ப்ரசமனம் முக்திஸ் தத ப்யாத்மநோ
ப்ரஹ்மைக்யாவகமாத் ச்ருதி ச்ரவணஜாத் இத்யாஹுரத்வைதிந: ॥

இது இந்த ஸித்தாந்தத்தின் ஸங்க்ரஹ ச்லோகம். இதன் அர்த்தம்:—

ஏகம்=தனக்கு ஸஜாதீயமானதும், விஜாதீயமானதும், ஒன்றுமில்லாததாய், தன்னிலும் ஒரு தர்மமும் இல்லாததான, ப்ரஹ்ம=ஆத்மவஸ்து, பரமார்த்தஸத்=பரமார்த்தமாயுள்ளது (ஆத்ம வஸ்துவுக்கு ஸஜாதீயமானது மற்றொரு ஆத்மா, விஜாதீய மானது ஆத்மாவைக் காட்டிலும் வேறுபட்டது).

இதனால் இரண்டாவது ஆத்மாயில்லை என்றும், ஆத்மா தவிர மற்றொரு வஸ்து இல்லை என்றும், ஆத்ம வஸ்துவில் ஒரு தர்மமும் இல்லை என்றும் சொன்னதாகிறது.

இங்கு 'ப்ராதிபாஸிகஸத்' 'வ்யாவஹாரிகஸத்' இவைகளைக் காட்டிலும் ஆத்ம வஸ்துவுக்கு வாசி தோன்றுவதற்காக 'பரமார்த்த ஸத்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. 'ததிதரன்...... ம்ருஷா'—ப்ரஹ்மத்தைக் காட்டில் வேறுபட்டது; மாயையின் கார்யமானதால் பொய்; 'ப்ரமை...... கதம்' ஒரு ப்ரஹ்மமே உபாதியில் ப்ரதிபலித்ததாய் அந்த ப்ரதிபலனத்தால் ஜீவனாகவும் ஈச்வரனாகவும் ஏற்பட்டது.

'ப்ராந்திঃ.........அஸ்ய' ஜீவாத்மாவுக்கு நான் ஞாதா, நான் கர்த்தா, நான் போக்தா, இது முதலிய ப்ராந்திதான் ஸம்ஸாரம்.

'தத்ப்ரசமனம் முக்திঃ' அந்த ப்ராந்தியின் நிவ்ருத்திதான் மோக்ஷம்.

'ததபி.........ச்ரவணஜாத்' தத்வமஸி என்கிற வேதாந்த வாக்யச்ரவணத்தால் உண்டாகும் ப்ரஹ்மாத்மைக்ய ஜ்ஞானத்தால் (தனக்கு ப்ரஹ்மத்தோடு ஐக்ய ஜ்ஞானத்தால்) அந்த ப்ராந்தி நிவ்ருத்தியுண்டாகிறது.

'இத்யா.........நঃ' என்றிப்படி அத்வைதி வேதாந்திகள் சொல்லுகிறார்கள்.

## ॥ ब्रह्मणः सत्यत्वनिरूपणम् ॥

### ப்ரஹ்மத்துக்கு ஸத்யத்வ நிரூபணம்

[1]ப்ரிதிவீ, ஜலம், தேஜஸ், வாயு, ஆகாசம் என்று பெயருடைய பஞ்ச பூதங்களும், அவைகளுடைய கலப்பாலுண்டான

---

1. पृथिवी—பூமி; तेजः—அக்னி.

'பௌதிகம்' என்று பெயருடைய சரம், அசரம் என்று இரண்டு வகைப்பட்ட நமக்குத் தென்படும் எல்லா வஸ்துக்களும் வாஸ்தவமானவையன்று. பாலைவனத்தில் [2]மத்யாஹ்நத்தில் ஸூர்ய கிரணங்கள் பரவ அவ்விடத்தில் வாஸ்தவமில்லாத ஜலப்ரவாஹமும் அதின் அலைகளும் காணப்படுவதுபோல(கானல்நீர்)இந்த ப்ரபஞ்சமும் உண்மையில்லாத போதிலும் உள்ளது போல் தோன்றுகிறது. அங்கே பரவிய கிரணங்கள் ஜலம் போல் தென்படுவது போல, இங்கும் எங்கும் பரவிய ஒரு வஸ்து இப்படி ப்ரபஞ்ச ரூபமாய்க் காணப்படுகிறது. இதுதான் பரப்ரஹ்மமென்று சொல்லப்படுகிறது.

வாஸ்த்தவமாயுள்ள ப்ரஹ்மஸ்வரூபம் தெரியாமல் பொய்யான ப்ரபஞ்சம் காணப்படுவானேன் எனில்—வாஸ்தவமான ப்ரஹ்ம ஸ்வரூபத்திற்கு அநாதி காலமாக மாயையென்று ஒரு வஸ்துவின் ஸம்பந்தம் வந்திருக்கிறது. இந்த மாயைக்கு தனக்கு ஆதாரமான ப்ரஹ்மத்தை மறைப்பது ஸ்வபாவம். அப்படி மாயையினால் மறைக்கப்பட்டதால் ப்ரஹ்ம ஸ்வரூபம் உள்ளபடி ப்ரகாசிப்பதில்லை.

இந்த ப்ரஹ்மத்துக்கு ஸத்தை, ப்ரகாசம், ஆநந்தம் என்று மூன்று ஆகாரங்கள் உண்டு; அதனால் தான் இது ஸச்சிதாநந்த ஸ்வரூபமென்று சொல்லப்படுகிறது. இந்த மூன்று ஆகாரங்களும் ப்ரஹ்ம ஸ்வரூபத்தைக் காட்டிலும் வேறுபட்டவையன்று. இந்த ப்ரஹ்மஸ்வரூபத்தில் ஒரு குணமும் கிடையாது: ஆகையால் இது நிர்குணம் என்றும் நிர்விசேஷம் என்றும் சொல்லப்படுகிறது.

ஸச்சிதாநந்த ரூபமான இந்த ப்ரஹ்மம் வாஸ்தவமாக உள்ளதென்று 'ஸ்த்யமாயும், விக்ஞானமாயும், ஆநந்தமாயும் உள்ளது ப்ரஹ்மம்' என்றிது முதலிய ஸ்ருதிகளாலும் அதற்கு ஒத்தாசையான யுக்திகளாலும் கிடைக்கிறது. யுக்தி எதுவெனில்—கீழ்ச் சொன்ன த்ருஷ்டாந்தத்தில் பாலைவனத்தில்

---

1. भौतिकं—பூதங்களிலிருந்து உண்டானவை.
2. मध्याह्नम्

பரவின ஸூர்ய கிரணத்தில் ஜலப்ரமம் உண்டாகிறது. இது போலவே அந்தந்த ப்ரமங்களில் ஒரு வஸ்துவிலே மற்ருெரு வஸ்துவுக்கு ப்ரமம் உண்டாகிறது. அவ்விதமே இங்கும் இந்த ப்ரபஞ்சத்தினுடைய ப்ரமம் ஒரு வஸ்துவில் உண்டாயிருக்க வேண்டும். அந்த வஸ்து ஸத்ய மன்று என்று ஒப்புக்கொண்டால், அதன் விஷயமான ப்ரமத்திற்கு ஆதாரம் ஒன்று ஒப்புக்கொள்ள வேண்டும். இப்படியே மேல் மேல் [1]ஆதார [2]பரம்பரை ஒப்புக்கொள்ள வேண்டியதாக வருகிறது. ஆகையால் ப்ரபஞ்ச ப்ரமத்திற்கு ஆதாரமான வஸ்து ஸத்யமாக உள்ளது என்று ஒத்துக்கொள்ள வேண்டும் என்பதே.

## ॥ प्रपञ्चमिथ्यात्वनिरूपणम् ॥

## ப்ரபஞ்சமித்யாத்வநிருபணம்

ச்ருதி ப்ரமாணத்தால் இந்த ப்ரஹ்மம் ஸத்யமாய் ஸித்திக்கிறுப்போல், ப்ரத்யக்ஷ ப்ரமாண பலத்தால் ப்ரபஞ்சம் ஸத்யமாக ஸித்திக்கத் தடையென்ன வென்ருல்—இது ஸத்யமென்று சொல்ல வழியில்லை. இது ஸத்யமாக இருந்தால் எப்போதும் காணப்பட வேண்டும். மூன்று காலங்களிலும் உள்ளது தான் பரமார்த்த ஸத்யமாக ஆகும். ப்ரபஞ்சத்திலுள்ள வஸ்துக்கள், உண்டாவதற்கு முன்னும், நாசத்திற்குப் பின்னும் காணப்படுவதில்லை. ஸத்யமாயிருந்தால் இறந்த காலம், நிகழ் காலம், எதிர் காலம் எனப்படும் மூன்று காலங்களிலும் இருப்பதாகக் காணப்பட வேண்டும். அப்படியன்றிக்கே ஒரு காலத்திலுண்டாய், சில கால மிருந்து. பிறகு நாசமடைந்து முன்னும் பின்னும் காணப்படாத வஸ்த்துக்கள் பரமார்த்த ஸத்தாக ஆக மாட்டா. ஆகையால் இந்த்ரஜாலாதிகளில்மாயையினுல் அஸத்

---

1. ஆதாரம்—எதில் ஒன்றுக்குத் தோற்றம் ஏற்படுகிறதோ அது ஆதாரம்.
2. பரம்பரை—ஒன்றின்மேலொன்ருக தொடர்ந்து ஒரு முடிவின்றிக்கே வருவது.

யமான வஸ்துக்கள் தோன்றுகிறது போல இங்கும் மாயையி ஞல் இந்த ப்ரபஞ்சம் உள்ளதாகத் தோன்றுகிறது. இந்த அர்த்தம் 'மாயையை யுடையவன் ஒருவன் இப்ரபஞ்சத்தை ஸ்ருஷ்டிக்கிருன்' என்றும், 'பரமாத்மா மாயைகளால் அநேக ரூபமுள்ளவனுய்த் தென்படுகிருன்' என்றும் சொல்லும் பலச்ருதி களால் கிடைக்கிறது.

மாயையாவது ஸத்வம், ரஜஸ், தமஸ் என்கிற குணத்ரய மயமாயும், [1]ஸத் என்றும் [2]அஸத் என்றும் சொல்லமுடியாத தாயும், தன்னுச்ரயத்தை மறைக்கும் ஸ்வபாவமுள்ளதாயும், மேல் மேல் விகாரத்தை யடைவதுமான ஒரு வஸ்து. இது அக்ஞானம், அவித்யை, மோஹம் என்கிற பெயர்களாலும் வ்யவஹரிக்கப்படும். சில ச்ருதிகள் இந்த மாயைக்கு நாசத் தைச் சொல்லுகிறபடியால், இந்த மாயை ஸத்யமன்று. இந்த மாயை ப்ரஹ்மத்தை ஆச்ரயித்து, அதன் ஸ்வரூபத்தை மறைத்து, ஆகாசம், வாயு, தேஜஸ், ஜலம், ப்ருதிவீ என்கிற விகாரங்களையும், அதிலிருந்து உண்டாகும் மற்ற விகாரங்களை யும் அடைந்து வருகிறது. அப்போது ப்ரஹ்மம் அந்தந்த ரூப மாய்த் தோன்றுகிறது. காப்பு முதலிய நகைகளுக்கு தங்கம் காரணமாகிறது போல ப்ருதிவீ முதலியவைகளுக்கு மாயை மூலகாரணமாயிருக்கும். இப்படி அஸத்யமான [3]மாயா கார்ய மானதால் இந்த ப்ரபஞ்சம் அஸத்யமென்று கிடைக்கிறது.

அன்றிக்கே ச்ருதிகள், 'பலவாகத் தோன்றும் வஸ்துக்களி ஒன்றும் இல்லை' என்று சொல்லுகிறபடியாலும், இந்த ப்ரபஞ் சம் [4]மித்யை என்று கிடைக்கிறது. ஆனுல் முன் சொன்ன த்ருஷ்டாந்தத்தில் ஸூர்ய கிரணத்தில் தென்படும் ஜலத்துக்கும் ப்ரஹ்ம ஸ்வரூபத்தில் தோன்றும்ப்ரபஞ்சத்திற்கும்வாசியுண்டு;

---

1. सत्—ஒரு காலத்திலும் இல்லையென்று சொல்லவொண்ணுத ப்ரஹ்மம் போன்றவை.
2. असत्—ஒரு காலத்திலும் இல்லாத முயற்கொம்பு
3. மாயா கார்யம்—மாயையிலிருந்து உண்டாகும் வஸ்து.
4. मिथ्या—பொய்.

அந்த ஜலாதிகள் ப்ராதிபாஸிக ஸத்; ப்ருதிவீ முதலிய ப்ரபஞ்சம் வ்யாவஹாரிகஸத்.

ஸத் என்பது[1] ப்ராதிபாஸிகம், வ்யாவஹாரிகம், பாரமார்த்திகம் என்று மூன்று வகைப்படும். இதில் ப்ராதிபாஸிகத்தாவது ப்ரஹ்மம் தவிர வேறு வஸ்துக்களில் தோன்றி, அந்த வஸ்துவின் உண்மையான ஸ்வரூபத்தை அறிவதனுல் நிவ்ருத்திப்பது. அதாவது தூரத்திலிருந்து பார்க்கும் பொழுது முத்துச்சிப்பியின் ஸ்வரூபம் மறைந்து அது வெள்ளி என்று ப்ரமம் உண்டாகிறது. பின்பு ஸமீபத்தில் போய்ப் பார்த்தால் இது வெள்ளியன்று, [2]சுக்தி என்று தெரிகிறது. இங்கு ப்ரமத்திற்கு ஆதாரமான சுக்தியினுடைய ஸ்வரூப ஜ்ஞானத்தால் வெள்ளி நிவ்ருத்திக்கிறது. இவ்வாறு முத்துச் சிப்பியில் தோன்றும் வெள்ளி தான் 'ப்ராதிபாஸிகத்' என்று சொல்லப்படுகிறது.

வ்யாவஹாரிகஸத்தாவது, ப்ரஹ்ம ஸ்வரூபத்தில் தோன்றும் ஆகாசம் முதலிய பூத பௌதிக ப்ரபஞ்சம். ப்ரஹ்மத்தின் உண்மையான ஸ்வரூபம் மறைந்து அதில் அக்ஞானத்தால் ஆகாசாதி ப்ரபஞ்சம் ஏற்படுகிறது. வேதாந்த வாக்கியங்களால் தத்வஜ்ஞானம் பிறந்து இரண்டாவது இல்லாததான ப்ரஹ்ம ஸ்வரூபத்தின் ஸாக்ஷாத்காரம் உண்டாகும்போது முன் ஏற்பட்ட ஆகாசாதி ப்ரபஞ்சம் நசித்துப் போகிறது. இதனுல் ப்ரஹ்ம ஸ்வரூபத்தின் தத்வ ஜ்ஞானம் தவிர மற்றொரு தத்வ ஜ்ஞானத்தால் நசிப்பது ப்ராதிபாஸிக ஸத் என்றும், ப்ரஹ்ம ஸ்வரூப தத்வஜ்ஞானம் ஒன்றினுல் மாத்ரம் நசிப்பது வ்யாவஹாரிக ஸத் என்றும் ஏற்படுகிறது.

பரமார்த்த ஸத்தாவது—ஒரு காலத்திலும் [3]நிவ்ருத்தியாகாமல் எல்லாக் காலங்களிலும் [4]அநுவர்த்திக்கும் வஸ்து. இதுதான் நிர்குணப்ரஹ்மம்.

---

1. प्रातिभासिकं, व्यावहारिकं, पारमार्थिकम्.
2. शुक्तिः—முத்துச் சிப்பி. 3. निवृत्तिः—நீங்குதல்.
4. अनुवृत्तिः—இடைவிடாமல் இருத்தல்.

## ॥ जीवेश्वरभेदभ्रमनिरूपणम् ॥

## ஜீவேச்வரபேதப்ரமநிருபணம்

ப்ரஹ்மத்தின் ஸ்வரூபத்தை மறைக்கும் ஸ்வபாவமுள்ள தான மாயைக்கு இரண்டு அம்சமுண்டு. ஒன்று தலையெடுத்த ஸத்வ குணத்தை யுடையதாயும், மற்றொன்று குறைந்த ஸத்வ முடையதாயும் இருக்கும். இவ்விரண்டில் முதலாவது மாயை யென்றும், இரண்டாவது அவித்யையென்றும் சொல்லப்படும். இந்த இரண்டும் கண்ணாடிபோல் பிம்பத்தை க்ரஹிக்க சக்தி யுள்ளது. ஆகையால் ப்ரஹ்மம் இவைகளில் ப்ரதிபலிக்கிறது. இதில் மாயையில் ப்ரதிபிம்பம் ஈச்வரனென்றும், அவித்யை யில் ப்ரதிபிம்பம் ஜீவனென்றும் ஒரே ப்ரஹ்மத்தில் பேதம் உண்டாகிறது. சிலர் மாயையில் ப்ரதிபிம்பம் ஈச்சுவரனென்றும், மாயாபரிணாமமான அந்தஃகரணத்தில் ப்ரதிபிம்பம் ஜீவனென் றும் சொல்லுகிறார்கள். அவித்யாம்சங்களும் அந்தஃகரணங் களும் அநேகங்களாகையால் அவைகளில் ப்ரஹ்ம-ப்ரதிபிம்பத் தால் பல ஜீவர்கள் ஏற்படுகிறார்கள்.

கண்ணாடியில் ப்ரதிபலிக்கிற முகம் நேரிலிருக்கும் முகத் தைக் காட்டிலும் உண்மையில் வேறன்று. ஆகிலும் வேறாகத் தோன்றுகிறது. அப்படியே இரண்டு கண்ணாடிகளில் ஒரு முகம் ப்ரதிபலித்தால் கண்ணாடியின் பேதத்தால் ப்ரதி பலிக்கும் முகங்களும் வேறு வேறாகத் தோன்றுகின்றன. வாஸ் தவத்தில் எல்லாம் ஒன்றே. இவ்விதமே ஒரே ப்ரஹ்மம் இரண்டு வஸ்துக்களில் ப்ரதிபலிப்பதால் மூன்றும் வேறு வேறா கத் தோன்றுகின்றன. அவற்றில், ஈச்வரரூபமான ப்ரதிபிம்பத் துக்கு ஆச்ரயமான மாயையில் அதிகமான ஸத்வகுண மிருப் பதால், அது அதிகமான ஞானம், சக்தி முதலியவைகளை யுள்ள தாயிருக்கும். கண்ணாடியிலுள்ள தோஷங்களெல்லாம் அதில் ப்ரதிபலித்த முகத்தில் தோன்றுகிறது போல, மாயையிலுள்ள அதிகமான ஞானம், சக்தி முதலியவை அதில் ப்ரதிபலிக்கிற ப்ரஹ்மத்தில் தோன்றுகிறது. அதனால் ஈச்வரனுக்கு ஸர்வச்ஞன்

ஸர்வசக்தன், ஸத்யஸங்கல்பன் முதலிய வ்யவஹாரங்கள் நடந்துவருகின்றன. இவனுக்கு அதிகமான ஞான சக்திகள் இருப்பதால் இவன் [1]ஆராத்யனுயும், தன்னை ஆராதிப்பவர்களுக்கு [2]பலப்ரதனுயும் ஆகிருன். இந்த ஈச்வரன் தான் ஸகுண ப்ரஹ்மம் என்று சொல்லப்படுகிருன்.

ஜீவரூபமான ப்ரதிபிம்பத்துக்கு ஆச்ரயமான அவித்யை அல்லது அந்தஃகரணம் ஸத்வகுணம் குறைவாயிருப்பதால் அல்பமான ஞானசக்திகளை யுடையதாயிருக்கும். அதனுல் அதில் ப்ரதிபலிக்கிற ப்ரஹ்மம் அல்பக்ஞமாய்த் தோன்றுகிறது. இதனுல் ஜீவன் அல்பக்ஞன் அல்பசக்திகள் என்கிற வ்யவகாரம் நடந்து வருகிறது.

மாயா [3]பரிணுமமான அந்தஃகரணத்தின் விகாரங்களான ஞானம், [4]இச்சா, [5]க்ருதி, த்வேஷம், ஸுகம், துக்கம் முதலானவைகள் அந்தஃகரணத்தில் ப்ரதிபலிக்கிற ஜீவனிடத்தில் தோன்றுகிற படியால் ஜீவனுக்கு நான் [6]ஞாதா, [7]போக்தா, [8]கர்த்தா, ஸுகீ, துக்கீ முதலிய வ்யவஹாரங்கள் நடக்கின்றன.

ஜலத்தில் ப்ரதிபலித்த சந்திரனிடத்தில் ஜலத்திலுண்டாகும் அசைதல் முதலியவை தோன்றி, சந்திரன் அசைகிருன் என்று ப்ரமத்தால் சொல்லப்படுவது போல் அந்தஃகரணத்தில் உண்டாகும் [9]சலநாதிவிகாரம் அதில் ப்ரதிபலித்த ப்ரஹ்மத்தில் தோன்றுவதால், ஜீவன் [10]இகலோக பரலோக ஸஞ்சாரம் செய்கிருன் என்கிற வ்யவஹாரம் உண்டாகிறது.

---

1. आराध्यः—பூஜிக்கப்படுபவன்.
2. फलप्रदः—பலத்தைக் கொடுப்பவன்,
3. பரிணுமம்—விகாரம்=மாறுதல்.
4. इच्छा:—ஆசை.
5. कृतिः—முயற்சி.
6. ज्ञाता:—அறிபவன்.
7. भोक्ता—அனுபவிப்பவன்.
8. कर्ता:—செய்பவன்.
9. चलनादिविकारः—அசைதல் முதலிய செய்கைகள்.
10. इहलोकपरलोकसञ्चारः—இவ்வுலகம், மேலுலகம் இவைகளுக்குப் போவது, வருவது.

ஜீவனுக்கு ஞானம், சக்தி முதலியவை குறைவு. அதனால் ராகத்வேஷாதிகளாலே தனக்கு இஷ்டமான வஸ்துவை யடைவதற்கும், அநிஷ்டமாய்த் தோன்றுவதை விலக்குவதற்கும் சக்தியற்றவனாய், அதற்காக ஈச்வரனை உபாஸித்து, அவனுடைய அநுக்ரகத்தால் ஐச்வர்யம் முதலான [1]ஸாம்ஸாரிக பலத்தை அடைகிறான். [2]நிஷ்காமனாய் ஈச்வரனை உபாஸித்தால், அவனுடைய அநுக்ரஹத்தால் சித்த சுத்தி உண்டாகி வேதாந்த ச்ரவணத்திற்கு [3]அதிகாரியாகிறான்.

## ।। बन्धमोक्षनिरूपणम् ।।

## பந்தமோக்ஷநிருபணம்.

இப்படி ப்ரஹ்மம் அந்தஃகரணத்தில் ப்ரதிபலிப்பதால் ஏற்பட்ட ஜீவாத்மா உண்மையில் நிர்விகாரமான ப்ரஹ்மமே. இப்படி இருந்த போதிலும், அழுக்கற்ற ஸ்படிகத்தில் அதன் ஸமீபத்தில் வைக்கப்பட்ட செம்பரத்தம்பூவின் சிவப்புத்தோன்றுவது போல, இந்த ஜீவனுக்கு [4]உபாதியான அந்தஃகரணத்தின் விகாரமானராகம், த்வேஷம் முதலியவை இவனிடத்தில் தோன்றுகின்றன. இந்த ப்ராந்திதான் ஸம்ஸாரம்.

இப்படி ஜீவனுக்கு வந்த ஸம்ஸாரம் நீங்குவதற்கு வழி என்னவென்றால் யாகம், தானம், ஹோமம் முதலிய வைதிக கர்மங்களைக் கொண்டு இந்த ஜீவாத்மா ஈச்வரனை ஆராதித்தால் அவனுடைய அநுக்ரஹத்தால் சித்தசுத்தி பிறக்கிறது. பிறகு மோக்ஷத்தில் ஆசையுண்டாய், அதற்காக வேதாந்த ச்ரவணத்

---

1. सांसरिकफल:—ஸ்வர்க்கம், பூமி இவைகளிலேயே அனுபவிக்கக் கூடிய பலம்.
2. निष्काम:—(பலத்தில்) ஆசையற்றவனாய்.
3. अधिकार:—ஒரு காரியத்தைச்செய்வதற்கு வேண்டிய யோக்யதை. உடையவன் அதிகாரி.
4. उपाधि:—ப்ரதிபலனத்திற்கு ஆதாரமாயிருப்பது.

தில் முயற்சிக்கிறுன். பிறகு குருவினுபதேசத்தால் [1]'தத்த்வமஸி' என்கிற வேதாந்த வாக்கியத்தின் அர்த்த ஜ்ஞானம் உண்டாகிறது. இந்த வாக்கியத்தில் 'தத்' என்கிற பதத்துக்கு ஸச்சிதாநந்த ரூபமாய், ஸர்வ விகாரரஹிதமாய் அத்விதீயமான ப்ரஹ்மம் பொருள். த்வம் என்கிற பதத்துக்கு, முஞ்ஜம் என்று சொல்லப்படும் புல்லின் மேல் புரைகளைக் கழித்து அதன் நடுவிலிருக்கும் குருத்தை வேருக எடுக்குமாப் போல சரீரம், இந்திரியம் முதலிய [2]உபாதிகளோடு கலந்திருக்கும் ஜீவாத்ம ஸ்வரூபத்தை [3]விசாரத்திஞல் அவைகளைக் காட்டிலும் வேறுபட்டதாக விவேகிக்கப்பட்ட சுத்தாத்ம ஸ்வரூபம் பொருள். இவை இரண்டுக்கும் [4]அபேதம் தத், த்வம் என்கிற [5]வாக்கியத்திற்கு அர்த்தம்.

இப்படி குருபதேசத்தாலே [6]பரோக்ஷ ரூபமான [7]நிர்விசேஷ சிந்மாத்ர ப்ரஹ்மாத்மைக்ய ஜ்ஞானம் உண்டாகிறது. பின்பு குரு முகத்தாலே கேட்ட அர்த்தத்தை இடைவிடாமல் பாவனை பண்ணுவதால், 'தத் த்வமஸி' வாக்கியத்தால் ஸாக்ஷாத்கார ரூபமான முன் சொன்ன ஜ்ஞானம் உண்டாகிறது. அப்போது ஸகல ப்ராந்தியும் கழிந்து ப்ராந்திகளுக்கு மூலமான அவித்யையும் கழிந்து சக்கரத்தை சுற்றிவிட்டு, நாம் கையை எடுத்து

---

1. तत् त्वमसि:
2. இங்கு உபாதி என்ருல் தனக்கு ஸ்வபாவமாகவே இல்லாமல் நடுவில் வந்தவை என்று அர்த்தம்.
3. ஆராய்தல்
4. அபேதம்—பேதமின்மை.
5. वाक्यं—பதங்களின் சேர்க்கை.
6. கண் முதலிய இந்திரியங்களால் நாம் ஒரு விஷயத்தை அறியும்போது உண்டாகும் ஞானத்திற்கு ப்ரத்யக்ஷம் அல்லது அபரோக்ஷ ஞானம் என்று பெயர். அநுமானம் அல்லது சாஸ்திரத்தால் உண்டாவதற்கு பரோக்ஷ ஞானம் என்று பெயர்.

   चिन्मात्र—தானுகவே ப்ரகாசிக்கிற ஞான ஸ்வரூபமானது.

   ब्रह्मात्मैक्यं—ப்ரஹ்மமும் ஆத்மாவும் ஒன்றே என்பது.
7. நிர்விசேஷம் என்ருல் ஒருவித குணமும் தர்மமுமற்றது.

விட்டாலும் சுழலுவது சில காலம் அநுவர்த்திக்கிருப்போல இந்தக் கர்மத்தால் ஆரம்பிக்கப்பட்ட சரீரம் மாத்திரம் சில காலம் நிற்கிறது. இந்த நிலைமைதான் ஜீவன்முக்த்யவஸ்தை என்று சொல்லப்படுகிறது. பின்பு [1]ப்ராரப்த கர்மம் கழிந்ததும் சரீரம் கழிந்து விடுகிறது. இந்த நிலை [2]விதேஹமுக்தி என்றும் [3]கைவல்யம் என்றும் சொல்லப்படும் பரம மோக்ஷம். அதாவது அவித்யாரூபமான ஆவரணம் நிச்சேஷமாய்க் கழிந்து [4]அகண்டாநந்த ப்ரஹ்மரூபாவிர்பாவம். இந்த மோக்ஷத்தைப் பெறுவதற்கு வேறு உலகங்களுக்குப் போக வேண்டா. இருந்த இடத்திலேயே கிடைக்கும்.

இந்த ஸித்தாந்தத்தில் ப்ரஹ்மம் தவிர வேறொன்றும் ஸத்யமானது இல்லை என்றும், ஜீவ ப்ரஹ்மங்கள் அபின்னமென்றும் ஒப்புக் கொள்ளுகிறபடியால் இதற்கு அத்வைத ஸித்தாந்தம் என்ற பெயர் உண்டாயிற்று.

அத்வைத ஸித்தாந்த ப்ரகரணம் முடிந்தது.

—( ❁ )—

---

1. प्रारब्धकर्म—பலத்தைக் கொடுக்க ஆரம்பித்த புண்யபாபகர்மம்
2. विदेहमुक्तिः
3. कैवल्यम्
4. अखण्डानन्द—பூர்ண ஆனந்தரூபமான

आविर्भावः—மறைந்து இருந்த வஸ்துவினுடைய தோற்றம்.

## 3. விசிஷ்டாத்வைத ஸித்தாந்த ப்ரகரணம்

## ॥ विशिष्टाद्वैतसिद्धान्तप्रकरणम् ॥

(இனி விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தை நிருபிக்கிறோம். இதற்கு ப்ரவர்த்தகர் ஸ்ரீ பகவத் ராமானுஜன்).

श्रीमल्लक्ष्मणयोगिनस्तु भुवनं सत्यं तदीशः श्रियः-
कान्तो ब्रह्म स एव सोऽखिलतनुः भिन्नास्ततश्चेतना : ।
सत्या संसृतिरीशनिग्रहकृता मुक्तिस्तु भक्त्यादिना
तत्प्राप्तिः परमे पदे तदनुभूत्याख्येति संचक्षते ॥

ஸ்ரீமல் லக்ஷ்மண யோகிநஸ்து புவநம் ஸத்யம் ததீசః ஸ்ரீயः-
காந்தோ ப்ரஹ்ம ஸ ஏவ ஸோ²கிலதனு: பிந்நாஸ் ததः சேதநா: ।
ஸத்யா ஸம்ஸ்ருதிரீசநிக்ரஹக்ருதா முக்திஸ்து பக்த்யாதிநா
தத் ப்ராப்திः பரமே பதே ததநுபூத்யாக்யேதி ஸஞ்சக்ஷதே ॥

[பதவுரை:—श्रीमल्लक्ष्मणयोगिनस्तु = ஸ்ரீ பகவத் ராமானுஜாசார்யரோவென்றால்; भुवनं = ப்ரபஞ்சம்; सत्यं = வாஸ்தவமாயுள்ளது; तदीशः = அந்தப்ரபஞ்சத்திற்கு ஈச்வரன்; श्रियःकान्तः = ஸ்ரீயःபதியான ஸ்ரீமந் நாராயணன்; स एवः = அவன்தான்; ब्रह्म = பரப்ரஹ்மம்; सः = அவன்; अखिलतनुः = சேதநாசேதனங்களெனப்படும் எல்லா வஸ்துக்களேயும் சரீரமாயுடையவன்; ततः = அவனைக் காட்டிலும்; चेतनाः = ஜீவர்கள்; भिन्नाः = வேறுபட்டவர்கள்; ईशनिग्रहकृताः = ஈச்வரனின் நிக்ரஹத்தாலேற்பட்ட; संसृतिः = ஸம்ஸாரம்; सत्या = வாஸ்தவமானது; मुक्तिस्तु = மோக்ஷமோவென்றால்; भक्तयादिना = பக்தியோகம் முதலிய உபாயங்களால் परमे पदे = பரமபதமென்கிற வைகுண்டத்தில் तदनुभूत्याख्या = அந்தப்ரஹ்மானுபவமென்கிற; तत्प्राप्तिः = அந்த பரப்ரஹ்மப்ராப்திதான்; इतिः = என்று; संचक्षते = சொல்லுகிறார் (ஸாதிக்கிறார்;]

இது இந்த ஸித்தாந்தத்திற்கு ஸங்க்ரஹச்லோகம்.

ஸ்ரீ பகவத் ராமநுஜரோ பின்வருமாறு ஸாதித்தருளுகிறார்: 'புவநம் ஸத்யம்' --ப்ரபஞ்சம் வாஸ்தவமாயுள்ளது. முத்துச் சிப்பியில் தோன்றும் வெள்ளியைப்போல் பொய்யன்று. அது ப்ராந்தியினால் காணப்படுவதேயொழிய ஒரு காரியத்துக்கும் உபயோகப்படுகிறதன்று. கடையில் காணப்படும் வெள்ளி பாத்திரம் முதலியவைகளாக செய்யப்பட்டு, அந்தப்பாத்திரங் கள் ஜலம் முதலியவை கொண்டுவர உபயோகப்படுகிறது. ஆகையால் இது பொய்யன்று. மேலும் ஈச்வரன், ப்ரக்ருதி என்கிற வஸ்துவைக்கொண்டு இந்த ப்ரபஞ்சத்தைத் தன் ஸங் கல்பமாத்திரத்தாலே ஸ்ருஷ்டிக்கிறான் என்று ச்ருதி சொல்லு கிறபடியால், ஸ்ருஷ்டிக்கப்பட்டதாகச் சொல்லப்படும் இந்த ப்ரபஞ்சம் பொய்யாகமாட்டாது. பொய்யான வஸ்து வுக்கு ஸ்ருஷ்டி ஸம்பவியாதன்றோ? மாயையை உபகரணமாக வுடைய ஈச்வரன் இந்த ப்ரபஞ்சத்தை ஸ்ருஷ்டிக்கிறான். 'மாயையாவது ப்ரக்ருதி', என்று ச்ருதி சொல்லுகிறது. இங்கு ப்ரபஞ்ச ஸ்ருஷ்டிக்கு மாயை உபகரணமென்றும், அந்த மாயை யாவது ப்ரக்ருதி என்றும் கிடைக்கிறது. இங்கு ப்ரபஞ்சத் துக்கு மூலமாகச் சொன்ன ப்ரக்ருதி விசித்ரமான ப்ரபஞ்சரூப கார்யத்தை உண்டாக்குகிறபடியால் மாயை என்று சொல்லப் பட்டதேயொழிய அவாஸ்தவம் என்கிற அபிப்ராயத்தால் அன்று. மாயை என்கிற சப்தத்துக்கு அவாஸ்தவம் என்கிற அர்த்தமும் கிடையாது.

मम योनिर्महद्ब्रह्म तस्मिन् गर्भं दधाम्यहम् ।
संभवः सर्वभूतानां ततो भवति भारत ॥

மம யோநிர்மஹத்ப்ரஹ்ம தஸ்மிந் கர்ப்பம் ததாம்யஹம் |
ஸம்பவஃ ஸர்வ பூதாநாம் ததோ பவதி பாரத ||

(பகவத்கீதை அத். 14 ச்லோ. 3)

ஜகத்துக்கு மூலகாரணமான என்னுடையதான ப்ரக்ருதி என்கிற வஸ்துவில் ஜீவஸமுதாயத்தை நான் சேர்க்கின்ற இந்தக் காரணத்தால் ஸர்வ பூதங்களும் உண்டாகின்றன என்று இந்த ச்லோகத்தின் அர்த்தம். இதில் அசேதனமான ப்ரக்ருதி

யோடு சேதனவஸ்துவை பகவான் சேர்ப்பதால் இந்த ப்ரபஞ்சம் உண்டாகிறது என்று சொல்லியிருப்பதால் இந்த ப்ரபஞ்சம் ப்ரஹ்மத்தின் அஞ்ஞானத்தால் கல்பிதமாகிறது என்று சொல்லுவதற்குக் கொஞ்சமும் இடமில்லை.

'தநிச:--காந்த: ஸ்ரீய: பதியான ஸ்ரீமந்நாராயணன் அந்த ப்ரபஞ்சத்திற்கு ஈசுவரன்.

'ப்ரஹ்ம ஸ ஏவ'—அவன்தான் பரப்ரஹ்மம். தைத்திரீயோப நிஷத்தில் ப்ருகுவல்லியில், 'எது ஜகத்காரணமோ அது ப்ரஹ்மம்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. நாராயணோப நிஷத்து முதலான சில உபநிஷத்துக்களில் 'நாராயணன் ஜகத் காரணம்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் நாராயணன் தான் ப்ரஹ்மம் என்று கிடைக்கிறது. நிர்குணப்ரஹ்மம் என்று வேறொன்று கிடையாது. உபநிஷத்தில் ப்ரஹ்மம் என்று எதனால் சொல்லப்படுகிறது? என்று ஒரு கேள்வியைக் கேட்டு, இதனிடத்தில் பெரியதான குணங்கள் இருக்கிறபடியால், இது ப்ரஹ்மம் என்று சொல்லப்படுகிறது என்று பதில் சொல்லப் பட்டிருக்கிறது.

ஆகையால், ப்ரஹ்மசப்தம் பெரியதான குணங்களையுள்ள வஸ்துவைச் சொல்லுகிறது என்று கிடைக்கிறபடியால் குணமில்லாத வஸ்துவை இது சொல்லமாட்டாது. ஆகையால், ஸகல கல்யாண குணங்களையும் உடையவனான ஸ்ரீமந்நாராயணனைத் தான் இந்த ப்ரஹ்மசப்தம் சொல்லுகிறது. அவன்தான் ப்ரஹ்ம சப்தத்திற்குப் பொருள்.

ஸ: அகிலதநு:--அந்த ஈசுவரன், சேதனர்கள் அசேதன வஸ்துக்கள் இவை எல்லாவற்றையும் சரீரமாக உடையவன். ஒரு சேதனனுக்கு [1]நியதாதேயமுமாய் நியத நியாம்யமுமாய், நியதசேஷமுமான த்ரவ்யம் அந்தச் சேதனனுக்கு சரீரம் என்று சொல்லப்படுகிறது.

---

1. नियताधेय

நியதாதேயமாகையாவது—அந்த சேதனனுடைய ஸ்வரூபத்தை எப்பொழுதும் ஆச்ரயித்திருக்கை. அதாவது, அவன் ஸ்வரூபத்தின் ஸம்பந்தத்தால் நிலைபெற்று அழியாமலிருக்கை.

நியதநியாம்யமாகையாவது—சேதனனுடைய ஸங்கல்பத்தால் தாங்கப்பட்டிருக்கை.

நியதசேஷமாகையாவது—அந்தச் சேதனன் ப்ரயோஜனத்துக்காகவே யிருக்கை.

நம்முடைய சரீரம், இந்த ஜீவாத்மஸ்வரூபத்தின் ஸம்பந்தம் இருக்கும்வரையில் இருந்து, அது தப்பிப்போனபோது அழிந்து போகிறது. ஆகையால் இந்தச் சரீரத்துக்கு சேதநஸ்வரூபம் ஆதாரமாய், அதனை ஆச்ரயித்திருக்கிறபடியால் இந்தச் சரீரம் ஆதேயமாய் இருக்கிறது. விழித்திருக்கும்போது அவனுடைய ஸங்கல்பத்தால்தாங்கப்பட்டு கீழே விழாமல் இருக்கிறது. அவனுடைய புண்ய பாபங்களாகிற கர்மத்தின் பலங்களான ஸுகதுக்கங்களின் அநுபவமாகிற, அவனுடைய ப்ரயோஜனத்துக்காகவே இந்தச் சரீரம் உண்டாயிருக்கிறது. ஆகையால் இது அவனுக்கு சரீரமாகிறது. இப்படியே சேதனாசேதன வஸ்துக்களெல்லாம், ஈச்வரனுடைய ஸ்வரூபத்தின் ஸம்பந்தத்தால் நிலைபெற்று அழியாமல், அவன் ஸங்கல்பத்தால் தாங்கப்பட்டு லீலாரஸம் போகரஸம் ஆகிய அவனுடைய ப்ரயோஜனத்திற்காகவே யிருக்கிறபடியால், இவையெல்லாம் ஈச்வரனுக்கு சரீரமாகிறது. இந்த அம்சம் அநேக ச்ருதிகளில் சொல்லப்பட்டியிருக்கிறது.

பிந்நா:...........சேதனா:—இந்த ஜீவாத்மாக்களெல்லாம் ஈச்வரனைக்காட்டிலும் ஸ்வத: வேறுபட்டவர்கள்.

'ஸத்யா......க்ருதா' இஜ்ஜீவாத்மாவுக்கு கர்மத்தால் நேர்ந்த ப்ரக்ருதி ஸம்பந்தம் ஸம்ஸாரம். அந்த ஸம்பந்தம் ஈச்வரனுடைய நிக்ரஹ ஸங்கல்பத்தால் உண்டாகிறபடியால் வாஸ்தவமாயுள்ளது. அந்த ப்ரக்ருதி ஸம்பந்தத்தால் உண்டாகும் ஆசை, த்வேஷம், ஸுகம், துக்கம் முதலானவை

களும், அவற்றின் அனுபவங்களும், வாஸ்தவமாயுள்ளபடியால் அது ப்ராந்தியன்று.

'முக்திஸ்து.........ததநுபூத்யாக்யா'—ஈச்வரன் விஷயத்தில் இந்தச் சேதனன் பண்ணும் பக்தி, ப்ரபத்தி இவையிரண்டில் ஒன்ருல் பரமபதம் என்கிற ஒரு லோகத்தில் அந்த ஈச்வரனைக் கிட்டி அவனை அனுபவிப்பது மோக்ஷம்.

ச்வேதாச்வதரோபநிஷத்தில் ஈச்வரனைத் தொடங்கி 'ப்ரக்ருதிக்கும் ஜீவாத்மாவுக்கும் பதி' என்றும் 'ஸம்ஸாரத்தினின்றும் மோக்ஷத்திற்கும் ஸம்ஸாரபந்தத்துக்கும் ஹேதுவானவன்' என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இங்கு, ஈச்வரன் ஜீவாத்மாவுடைய ஸம்ஸார பந்தத்திற்கும் ஸம்ஸாரத்தினின்றும் விடப்படுவதற்கும் காரணபூதன் என்று சொல்லுகிறபடியால், ஈச்வரன் ஜீவாத்மாவுக்கு ஸம்ஸாரஸம்பந்தத்தையும் மோக்ஷத்தையும் உண்டாக்குகிருன் என்று கிடைக்கிறது.

तानहं द्विषतः क्रूरान् संसारेषु नराधमान् ।
क्षिपाम्यजस्रमशुभानासुरीष्वेव योनिषु ॥

தாநஹம் த்விஷதஃ க்ராந் ஸம்ஸாரேஷு நராதமாந் |
க்ஷிபாம்யஜஸ்ரமசுபாநாஸுரீஷ்வேவ யோநிஷு ||

பகவத் கீதை. 16–19.

இந்த ச்லோகத்தில் என்னிடத்தில் த்வேஷம் முதலான துஷ்கர்மங்களைச் செய்யுமவர்களை ஸம்ஸாரத்தில் தள்ளுகிறேன் அதிலும், அஸுர ஜன்மத்தில் தள்ளுகிறேன் என்று பகவான் தானே சொல்லியிருக்கிறபடியாலும்.

तेषामहं समुद्धर्ता मृत्युसंसारसागरात् ।
भवामि न चिरात् पार्थ मय्यावेशितचेतसाम् ॥

தேஷாமஹம் ஸமுத்தர்த்தா ம்ருத்யுஸம்ஸார ஸாகராத்|
பவாமி நசிராத் பார்த்த மய்யாவேசிதசேதஸாம்||

அத்-12, ச்லோகம்-7

இந்த ச்லோகத்தில், "என்னிடத்தில் மிகவும் பக்தி பண்ணுபவர்களை ஸம்ஸாரமாகிற ஸாகரத்தினின்றும் எடுத்து விடுகிறேன் மோக்ஷத்தை அடையும்படி செய்கிறேன்" என்று பகவானே சொல்லியிருக்கிறபடியாலும், பாபகர்மங்களைச் செய்பவர்களுக்கு அதற்குப்பலனாக ஜன்மபரம்பரையாகிற ஸம்ஸாரத்தையும், பகவத் பக்தி பண்ணுபவர்களுக்கு மோக்ஷத்தையும் உண்டாக்குகிறான் என்று கீழ்ச்சொன்ன ச்ருதியின் அர்த்தம் வெளிப்படுத்தப்பட்டிருக்கிறது. இதனால், பகவானுடைய நிக்ரஹத்தால் (தண்டனையால்) ஸம்ஸாரம் என்றும், அநுக்ரஹத்தால மோக்ஷம் என்றும் கிடைக்கிறது. ஆகையால், பகவானுடைய நிக்ரஹத்தால் ஏற்படும் ஸம்ஸாரம் ஸத்யம் என்று ஸ்பஷ்டமாகிறது.

தைத்திரீயோபநிஷத்தில் ஆநந்த வல்லியில், பகவானுடைய உபாஸனத்தைச் செய்யுமவன் பரம வ்யோமத்தில் (ஸ்ரீ வைகுண்டத்தில்) ப்ரஹ்மத்தோடுகூட ப்ரஹ்மத்தின் குணங்களையும் அநுபவிக்கிறான் என்று சொல்லியிருக்கிறபடியால் ஸ்ரீ வைகுண்டத்தில் பகவானையும், அவனுடைய கல்யாண குணங்களையும் அநுபவிப்பது மோக்ஷம் என்று கிடைக்கிறது. ஆகையால் ஜீவனும் ப்ரஹ்மமும் வேறு என்கிற ப்ரமம் ஸம்ஸாரமென்றும், ஜீவனுக்கும் ப்ரஹ்மத்துக்கும் ஐக்யஜ்ஞானத்தால் உண்டாகும் அந்த ப்ரமநிவ்ருத்தி முக்தி என்னும் பக்ஷம், ச்ருதிஸம்மதமன்று என்று ஸ்ரீபகவத்ராமாநுஜரின் அபிப்ராயம்.

## ॥ जगत्सत्यत्वनिरूपणम् ॥

## ஜகத்ஸத்யத்வநிருபணம்

ப்ருதிவீ, ஜலம், தேஜஸ், வாயு, ஆகாசம் என்கிற ஐந்து பூதங்களும், அவைகளின் கலப்பினால் உண்டான சராசரரூபமான இந்த ப்ரபஞ்சமும் ஸத்யமாயுள்ளது. [1]கானல் நீர் போல்

---

1. பாலைவனத்தில மத்யானத்தில் ஸூர்யகிரணங்கள் பரவுவதால் காணப்படும் ஜலம்.

அஸத்யமன்று. கானல் நீரில் ஸ்நாநம் பானம் முதலியவை செய்யமுடியாது. அவ்வாறில்லாமல் நதியிலுள்ள ஜலம் ஸ்நாநம் முதலியவைகளுக்கு உபயோகப்படுகிறபடியால், கானல் நீரைப்போல இதுவும் பொய்யாயிருக்க முடியாது. பொய்யாயிருந்தால் அதைக்கொண்டு கார்யம் நடவாது. ஆகையால் ஆற்றின் ஜலம் ஸத்யமானது. அது ஸத்யமானால், [1]ப்ரவாஹத்திற்கு முன்னும் பின்னும் ஜலம் காணவேண்டுமே, அவ்விதம் இல்லாததை எப்படி உண்மையானது என்று சொல்லலாம் எனில், முன்னும் பின்னும் காணாததால் ப்ரவாஹம் அநித்யமென்று கிடைக்குமேயொழிய அஸத்ய மென்று கிடைக்காது. அஸத்யமாவது--ஒரு கார்யத்திற்கும் உதவாதது. அநித்யமாவது--கார்யத்திற்கு உபயோகப்பட யோக்யதையோடு சில காலமிருந்து அழிந்து போவது. இதற்கு-த்ருஷ்டாந்தம் மண்ணை ஜலத்தைச்சேர்த்து பிசைந்தால் அது உருண்டையாகிறது. பிறகு குயவனால் பானையாகச் செய்யப்படுகிறது. அப்போது ஜலம் கொண்டுவருவது முதலிய கார்யங்களுக்கு உபயோகப்படுகிறது. கல், தடி முதலானவைகளால் அந்தப்பானையை அடித்தால், அது பானை என்னும் [2]ஆகாரத்தை விட்டு ஓடாகிறது. அந்தஓட்டை உடைத்தால் பொடியாய் மண்ணாகிறது. ஆகையால் மண் என்னும் வஸ்து நித்யமாயுள்ளது. இடையிடையே வரும் ஆகாரங்கள் அநித்யம். முதலிலுள்ள வஸ்து எப்பொழுதும் உள்ளதுதான். ஆனால் நதிஜலமும் முன்னும் பின்னும் இருக்கவேண்டாவோ வென்றால்--அதில் சிறிது பாகம் மணலில் மறைந்தும், சிறிது ஸூர்யகிரணங்களில் கலந்தும் போகிறபடியால் காணப்படுவதில்லை. வஸ்து உள்ளது தான்; ஆனால் ப்ரவாஹமாயுள்ள ஆகாரம் அப்போது இல்லாதபடியால் [3]கார்யகாரியாவதில்லை. இதனால் அது அஸத்யமாக மாட்டாது, அநித்யமாகும். நித்யமாவது எப்போதும் அநுவர்த்திக்கும் வஸ்து. ப்ரவாஹாகாரம் எப்போதும் அநுவர்த்தித்து வரா

---

1. प्रवाहः—வெள்ளம்.
2. आकारः—உருவம்.
3. कार्यकारि—குளிப்பது குடிப்பது முதலிய கார்யங்களுக்கு உபயோகமாயிருப்பது.

மையால் அநித்யமாய் முடிகிறது. இப்படியே மண், பொன் முதலியவைகளுக்கு அப்போதைக்கப்போது வரும் பானை காப்பு முதலிய ஆகாரங்களிலும் கண்டுகொள்வது. அநித்ய மாய் இருப்பது தான் அஸத்யமாகை என்றால், இப்படிப்பட்ட அஸத்யமாகை விருத்த மன்று. இந்த அஸத்யமாகையும் ப்ர வாஹாகாரத்திற்கே தவிர எப்போதும் அநுவர்த்திக்கும் ஜலத் திற்கு இல்லை.

ஸத்யமாவது (நித்யமாவது) — எப்போதும் அநுவர்த்திக் கும் வஸ்து. இது இரண்டு விதம்—ஒன்று ஸ்வரூபத்தில் மாறு பாடில்லாமல் அநுவர்த்திக்கும். மற்றொன்று ஸ்வரூபத்தின் மாறுபாட்டோடு அநுவர்த்திக்கும். முதலில் சொல்லியது அபரிணாமி நித்யம். பரப்ரஹ்மமும் ஜீவாத்மாக்களும் இவ் வகைப்பட்டன. இரண்டாவது [1]பரிணாமி நித்யம்; ப்ரக்ருதி, காலம் முதலியவைகள் இதைச் சேர்ந்தன.

ப்ரக்ருதியாவது ஆகாசம், வாயு, தேஜஸ், ஜலம், ப்ருதிவீ முதலிய விகாரங்களை அடைந்துகொண்டு இவைகளுக்கெல்லாம் மூலகாரணமான வஸ்து. உலகில் காணப்படும் எல்லாப் பதார்த்தங்களும் இதன் விகாரங்களேயாகும். ப்ரக்ருதி ஸ்வ ரூபம் எப்போதும் அநுவர்த்திக்கும். அதன்விகாரங்கள் அவ்வப் போது உண்டாம். சிலகாலமிருந்து பிறகு கழியும். அவைகளைக் கொண்டு காரியங்கள் நடக்கிறபடியால் அவைகளெல்லாம் ஸத் யம். ஆனால் ஸ்வப்நத்தில் ஒருமனிதன் பொன் வெள்ளி முத லியவைகளைக் காண்பதாகவும், அவைகளைக்கொண்டு காப்பு, கடுக்கன் முதலியவை செய்து தரிப்பதாகவும் காண்கிறான். இப் படி ஸ்வப்நத்தில் காணப்பட்ட வெள்ளி முதலானவைகளைக் கொண்டு நகை செய்வது தரிப்பது முதலிய காரியங்கள் நடக் கிற படியால் அவை ஸத்யமாகத் தடையென்ன வென்றால், ஸ்வப்ந காலத்தில் அவைகளால் சில கார்யங்கள் நடந்ததாகக் கண்டாலும், தூங்கி எழுந்ததும், தன் கையிலும் காதிலும் பூண்டுக் கொண்டதாகக் கனவு கண்ட காப்பு கடுக்கன் முதலிய

---

3. பரிணாமி—மாறுதல் அல்லது விகாரத்தையுடையது. அதில்லாதது அபரிணாமி.

வைகள் காணப்படுவதில்லை. 'ஸ்வப்நம் கண்டேன், ஒன்றுமில்லை' என்று அந்த வஸ்துக்களுக்கு இல்லாமை காண்கிறபடியால் ஸ்வப்நத்தில் கண்ட வஸ்துக்களும் அதனால் உண்டானதாகக் கண்ட காரியங்களும் பொய்யாகின்றன. [1]ஜாக்ரத்தசையிலும் நடுப்பகலில் கானல் நீரைக்கண்டு, பின்பு கிட்டே போய்ப் பார்த்தால், இது ஜலமன்று; நாம் ப்ரமித்தோம் என்று புத்தி உண்டாகிறபடியால் இது மித்யை உண்மையான நதீஜலத்தில் ஜாக்ரத்தசையில் நாம் ஸ்நாந பானம் செய்வதாலும், செய்தது பொய்யென்று பின்னால் தோன்றாத படியாலும், ப்ரத்யக்ஷத் தால் காணப்படுகிற சராசரரூபமான ப்ரபஞ்சம் ஒன்றுமில்லை என்கிற ஞானம் உண்டாகாமையாலும் இவை உண்மையாக உள்ளவை. இங்கு இது அறியத்தக்கது—சில இடங்களில் இல் லாத வஸ்துக்கள் தோன்றுகின்றன. சில இடங்களில் இருக்கிற வஸ்துதான் தோன்றுகிறது. ஆகையால் ஒரு வஸ்து தோன்று கிறது என்கிற இவ்வளவு மாத்திரத்தைக் கொண்டு வஸ்து உண் மையாகவே உள்ளது என்று நிச்சயிக்கக் கூடாது. கண்டபின் கிட்டே போய்ப்பார்த்து, வஸ்து அங்கே இல்லாமற் போனால் 'வஸ்து இல்லை, இருப்பதாக நாம் ப்ரமித்தோம்' என்று ஞான முண்டானால் முன் பிறந்த ஞானம் ப்ரமமென்றும், கண்டது மாத்திரமே யொழிய இங்கே ஒன்றுமில்லை என்று ஞானமுண்-டாகாதபோது முன்புண்டான ஞானம் [2]யதார்த்தமென்றும் நிச் சயித்து, இவைகளைக் கொண்டு வஸ்து உண்டு இல்லை என்று நிச்சயிக்கவேண்டும்.

ஸ்வப்நத்தில் கண்ட வஸ்து தூங்கி எழுந்த பின் கண்ட தொழிய ஒன்றுமில்லையென்றும், பாலைவனத்தில் தோன்றியது ஜலம் இல்லை என்று உறுதியாகத் தெரிகிறபடியாலும், முதலி லுண்டான ஞானம் ப்ரமமாய், அதில் தோன்றிய வஸ்துவும் அஸத்யமாகிறது. ப்ரத்யக்ஷத்தில் காண்கிற ப்ரபஞ்சத்திலுள்ள வஸ்துக்களில், இவை ஒன்றுமில்லை என்கிற புத்தியுண்டாகக் காணாமையால் இந்த ப்ரத்யக்ஷம் யதார்த்தமாகி அதில் காணும்

---

1. जाग्रद्दशा— விழித்துக் கொண்டிருக்கும் காலம்.
2. यथार्थम् —ஸத்தியமான வஸ்துவை விஷயமாகவுடையது.

வஸ்துக்களும் ஸத்யமாக இருக்கின்றன. இது ஸத்யம், இது மித்யை என்று அறிவதற்கு இது வழி.

சராசரரூபமான உலகம் ப்ரத்யக்ஷத்தால் அஸத்யம் என்று ஏற்படாவிட்டாலும், ச்ருதியில் ப்ரபஞ்சமென்றும் ஸத்யமாகாது என்று சொல்லப்படுகிறபடியால், இந்த ப்ரபஞ்சம் அஸத்யம் என்று ஒப்புக்கொள்ள வேண்டாவோ என்றால், ஸர்வஸம்மதமான ச்ருதிகளில் அப்படிச் சொல்லியிருப்பதாகக் காணவில்லை. மேலும் ப்ரத்யக்ஷவிருத்தமான விஷயத்தை ச்ருதி சொல்லவும் மாட்டாது. மேல் பார்வையில் சில ச்ருதிகளுக்கு அப்படி அர்த்தம் தோன்றினாலும், ப்ரத்யக்ஷத்திற்கு விரோதமில்லாமல் அவைகளுக்கு அர்த்தம் சொல்ல முடியுமாயிருக்க, ப்ரத்யக்ஷத்திற்கு விரோதமாக அர்த்தம் செய்வது உசிதமன்று.

ப்ரத்யக்ஷத்தால் அறிந்துகொள்ள முடியாத அத்விதீயப்ரஹ்மாத்மைக்யத்தைத் தெரிவிக்கவே ச்ருதி அவதரித்திருக்கிறபடியால் இவைகளுக்கு ப்ரபஞ்சம் மித்யை என்பதிலேயே நோக்கம். ஆகையால் ப்ரத்யக்ஷத்திற்கு விருத்தமாயிருந்தாலும் [1]ப்ரபஞ்சமித்யாத்வமே ச்ருதிக்குப்பொருள் என்று ஒப்புக்கொள்ளவேண்டாவோ என்னில், அத்விதீய ப்ரஹ்மாத்மைக்ய ஞானத்தை உண்டாக்குவதற்காக ச்ருதி [2]ஆவிர்பவித்தது என்று ஸித்தித்தாலன்றோ ச்ருதிக்கு ப்ரபஞ்ச-மித்யாத்வம் பொருள் என்று ஒப்புக்கொள்ளவேண்டும். அது அப்படி இல்லை. ப்ரத்யக்ஷத்திற்கு எட்டாததாய் [3]ஸம்ஸாரிகள் அவசியம் அறிய வேண்டிய அநேகார்த்தங்களைத் தெரிவிப்பதற்காகவே ச்ருதிகள் தோன்றியிருக்கின்றன. ஜகதீச்வரன் ஒருவனிருக்கிறானென்றும் அவனையாராதித்தால் நமக்கு இஷ்டமான பலங்களைக் கொடுக்கிறானென்றும், இது முதலான பல விஷயங்களைத் தெரிவிப்பதற்காக ச்ருதி ஆவிர்பவித்தது. ஈச்வரன் ஜகத்தை ஸ்ருஷ்டிக்கிறான். ரக்ஷிக்கிறான். ஜகத்திற்குள் புகுந்து அதை நியமிக்கிறான். தன் ஸங்கல்பமாத்ரத்தாலே தரிக்கிறான். தன்னையாரா

---

1. प्रपञ्चमिथ्यात्वं —உலகம் பொய் என்பது.
2. தோன்றிற்று.
3. संसारि— (கர்மத்தால்) இவ்வுலகில் உழலும் ஜீவன்.

நித்தவர்களுக்கு பலத்தைக் கொடுக்கிறான் என்று இதுமுதலான ப்ரத்யக்ஷத்தால் அறிய முடியாத பல அர்த்தங்களைத் தெரிவிக்கின்றது என்று ஒப்புக்கொண்டால் ச்ருதியின் ஆவிர்பாவம் ப்ரயோஜனமுள்ளதாகவில்லையா? இப்படியிருக்க, அத்விதீய ப்ரஹ்மாத்மைக்யத்தைத் தெரிவிக்கைக்காக ச்ருதி ஆவிர்பவித்தது என்று ஒப்புக்கொண்டு, ப்ரபஞ்சத்தை [1]நிஷேதிக்கிறாப் போல் மேல்பார்வைக்குத் தோன்றும் சில ச்ருதிகளுக்கு அதுவே அர்த்தமென்று சொல்லுவது உசிதமன்று. அப்படி ஒப்புக்கொண்டால் ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகளைச் சொல்லும் ச்ருதிகளுக்கு [2]வையர்த்யம் வரும்.

இங்கே இது தெரிந்துகொள்ள வேண்டும்—ச்ருதிகளில் சில, 'ஈச்வரன் ரக்ஷகன், ஜகத்து ரக்ஷிக்கப்படுகிறது; ஈச்வரன் நியமிக்கிறவன், ஜகத்து நியமிக்கப் படுகிறது; அவன் தரிக்கிறவன். இது தரிக்கப்படுகிறது,' என்று இவ்விதமாக ஈச்வரனுக்கும் ஜகத்துக்குமுள்ள பலவித ஸம்பந்தங்களைச் சொல்லுகின்றன. சில ச்ருதிகள் ஜகத்து இல்லை என்று நிஷேதிக்கிறாப்போல் தோன்றுகின்றன. இப்படி ச்ருதிகள் இரண்டு விதமாக இருக்கிற படியால், ச்ருதிக்கு, ஜகத்துக்கும் ஈச்வரனுக்கும் உள்ள முன் கூறப்பட்ட ஸம்பந்தங்களைச் சொல்வதில் நோக்கா அல்லது ஜகத்தை இல்லை என்று சொல்வதில் நோக்கா என்று விசாரிப்போம். ஜகத்தை நிஷேதிப்பதில் தான் நோக்கம் என்று ஒப்புக்கொண்டால், ஜகத்துக்கும் ஈச்வரனுக்கும் ஸம்பந்தங்களைச் சொல்லும் ச்ருதிகள் வ்யர்த்தமாய் விடுகின்றன. ஏனெனில், ப்ரத்யக்ஷத்தினால் ஈச்வரனுக்கும் ஜகத்துக்கும் ஒரு ஸம்பந்தம் தோன்றுகிறது. அந்த ஸம்பந்தத்தை இந்த ச்ருதிகள் [3]அநுவதிக்கின்றன என்று சொல்லவொண்ணாது: அந்த ஸம்பந்தங்கள் ப்ரத்யக்ஷத்திற்கு எட்டினாலன்றோ அதற்கு அநுவாதம் என்று சொல்லலாம். ஈச்வரனே கண்ணுக்கு எட்டாத

---

1. निषेधः—இல்லை என்று சொல்வது.
2. वैयर्थ्यम्—ப்ரயோஜனமில்லாமை.
3. अनुवाद—வேறொன்றினால் தெரிந்துகொண்டதை மறுபடி சொல்லுவது.

வனாயிருக்க அவனோடு ஸம்பந்தம் எப்படி கண்ணுக்குத்தெரியும்? இனி அந்தப் பலவிதமான ஸம்பந்தங்களை ஜகத்தோடு நிஷேதிக்கைக்காக இந்த ஸம்பந்தங்களை ச்ருதி [1]விதிக்கிறது என்று சொல்வோமானால், அப்போது கண்களுக்கு எட்டாத அர்த்தங்களை ச்ருதி தானே சொல்லி தானே நிஷேதிக்கின்றது என்று சொன்னதாக ஆகும். இது பைத்தியக்காரனுடைய வ்யாபாரம் போலாகும்.

ஈச்வரனுக்கும் தனக்குமுள்ள ஸம்பந்தத்தையறிந்து, அவனை உபாஸித்து இஷ்டபலங்களை அடைவதற்காக இந்த ஸம்பந்தங்களை ச்ருதி சொல்லுகிறது என்றும் சொல்லக்கூடாது. ஏனென்றால் அப்போது [2]ப்ரபஞ்ச நிஷேத ச்ருதிகள் ப்ரபஞ்சத்தை மாத்திரம் நிஷேதிக்கிறதா அல்லது ப்ரபஞ்சத்தோடு கூட ஈச்வரனுடைய [3]ரக்ஷகத்வம் முதலிய குணங்களையும் நிஷேதிக்கிறதா என்று விசாரிப்போம். ப்ரபஞ்சமாத்ரத்தை நிஷேதிக்கிறது என்றால், ஈச்வரனுடைய ரக்ஷகத்வாதி குணங்களுக்கு நிஷேதமில்லை என்று கிடைக்கும். இதனால் ப்ரஹ்மம் [4]நிர்குணம் [5]அத்விதீயம் என்று சொல்லுவது ஸித்தியாமல் [6]உத்தேச்ய ஸித்தி பிறவாது. அந்த குணங்களையும் நிஷேதிக்கிறது என்று ஒப்புக்கொண்டால், அப்போது ஈச்வரனுக்குச்சொன்ன ரக்ஷகத்வாதி குணங்கள் ஒன்றுமில்லை என்று கிடைக்கையால் ஈச்வரனுக்கும் ஜகத்துக்கும் கீழ்ச்சொன்ன ஸம்பந்த விசேஷங்களை விதிக்கிற வாக்யங்களுக்கு உத்தேச்யம் ஸித்தியாமல், அவைகள் வ்யர்த்தமாய் விடும். தன் ரக்ஷணார்த்தமாக ஈச்வரனை உபாஸிப்பதில் ப்ரவ்ருத்திப்பிப்பதன்றோ அந்த வாக்யங்களுக்கு உத்

---

1. विधिः—ஏற்கனவே தெரியாததைத் தெரிவிக்கிறது. அல்லது ஒரு கார்யத்தில் ப்ரவருத்தியாத ஒருவனை அதைச் செய்யும்படி தூண்டுவது.
2. प्रपञ्चनिषेधश्रुति —உலகம் இல்லை என்று சொல்லும் ச்ருதி.
3. रक्षकत्वं —ரக்ஷிக்கும் தன்மை.
4. निर्गुणं-குணமற்றது.
5. अद्वितीयं –இரண்டாவதாக ஒன்று இல்லாதது.
6. उद्देश्यसिद्धिः–விருப்பத்தினுடைய நிறைவேறுதல்.

தேச்யம்? ரக்ஷகத்வாதி குணங்கள் அவனுக்கு இல்லை என்று தெரிந்தால், தன் ரக்ஷணத்திற்காக அவனை உபாஸிப்பதில் சேதநர்கள் எப்படி முயலுவார்கள்? ஆகையால் ப்ரபஞ்சத்தை நிஷேதிக்கிறது போல் தோன்றும் வாக்யங்களுக்கு ப்ரபஞ்ச நிஷேதத்தில் தாத்பர்யம் கொள்ளுகை அநுபபந்நம். ஆகையால் சில வாக்யங்கள் ஜகத்துக்கும் ஈச்வரனுக்கும் பலவித ஸம்பந்தங்களைச் சொல்லி, அதனால் ப்ரபஞ்சத்திற்கு [1]ஈச்வர-பாரதந்தர்யத்தை அறிவிக்கின்றன. இந்நிஷேத வாக்யங்கள் ப்ரபஞ்சத்திற்கு ஸ்வாதந்த்ர்யத்தை நிஷேதிக்கின்றன என்று கொள்ளுகை உசிதம். அப்போது [2]ஸ்வாதந்த்ர்ய நிஷேதமுகத்தால் ஜகத்துக்கு ஈச்வரனோடு ஸம்பந்தம் சொல்லும் ச்ருதிகளால் கிடைத்த ஈச்வரபாரதந்தர்யத்தை நிலைப்படுத்தியதாய் எல்லாவாக்யங்களும் [3]ஸார்த்தகமாகின்றன. ஆகையால் ச்ருதிகளில் ஜகத்திற்கு நிஷேதம் இல்லை. ச்ருதி 'ப்ரஹ்மம் அநந்தம்' என்று சொல்லுகிறது. அநந்தமாகையாவது 'இங்கே இல்லை' இப்பொழுது இல்லை, இதுவன்று என்கிற அளவு இல்லாமலிருக்கை.

[4]ஜடமான ப்ரஞ்சம் ஸத்யமாக இருந்ததேயாகில் அஜடமான ப்ரஹ்மம் ஜடமான ப்ரபஞ்சமன்று என்று அளவு வரவேண்டி இருப்பதால் ச்ருதியில் ப்ரஹ்மத்திற்குச் சொன்ன [5]ஆநந்த்யம் [6]அநுபபந்நமாகிறது. ப்ரஹ்மம் அத்விதீயம் என்று ச்ருதி சொல்லுகிறபடியால் ப்ரஹ்மத்தைக்காட்டிலும் இரண்டாவதான வஸ்து இல்லை என்று கிடைக்கிறது. இந்த [7]த்வைத ப்ரபஞ்சம் ப்ராந்தி மாத்திர மாயுள்ளது, அத்வைதமே பரமார்த்தமாயுளளது என்று சில ச்ருதிகள் சொல்லுகின்றன. இப்

---

1. ईश्वरपारतन्त्र्यं—ஈஸ்வரனுக்கு அதீனமாயிருத்தல்.
2. स्वातन्त्र्यनिषेधमुखेन—தன்னிஷ்டப்படி நடக்கச் சக்தியற்றது என்று சொல்லுகிற இவ்வழியால்.
3. सार्थक —ப்ரயோஜனத்தோடு கூடியதாக.
4. जडं —ஞானமில்லாதது.
5. आनन्त्यं:—அளவற்ற தன்மை.
6. अनुपपन्नं —அயுக்தம்.
7. द्वैतप्रपञ्च:—பல பேதங்களையுடைய உலகம்.

படியே சில புராணங்களும் ப்ரபஞ்சம் ஸ்வப்நம் போன்றது என்று சொல்லுகின்றன. இவைகளால் ப்ரபஞ்சம் அஸத்ய மென்று கிடைக்கவில்லையோ என்றால்:—

அநந்தமாகையாவது-தேசத்தாலும், காலத்தாலும், வஸ்துவாலும் அளவில்லாமலிருக்கை. இவைகளில் மூன்றாவது தனக்கு மேற்பட்ட ஒருவஸ்து இல்லாமலிருக்கையே யொழிய அந்தவஸ்துவன்று என்னும்படி இருக்கையன்று. ப்ரபஞ்சம் ஸத்யமாக இருந்தாலும் ப்ரஹ்மத்தைக்காட்டிலும் ஒரு ப்ரகாரத்தாலும் உயர்ந்த வஸ்து வேறொன்று இல்லாமையால் அதற்கு ஒருவித அநுபபத்தியும் இல்லை. சில விடங்களில் அத்விதீயம் என்கிற ச்ருதிக்கு தன்னோடு ஸமானமான இரண்டாவது இல்லை என்று பொருள். ஜகத்காரணத்தைச் சொல்லுமிடத்தில் இந்த 'அத்விதிய' பதத்திற்கு தன்னையொழிய [1]நிமித்தகாரணம் வேறில்லை என்று பொருள்.

எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட சருதியில் ப்ரபஞ்சம் மாயாமாத்ரமென்று சொல்லப்படவில்லை. அப்படிச் சொல்லும் வாக்யத்தை ச்ருதியென்று ஒப்புக்கொண்டாலும், ஜீவாத்மாக்களில் தோன்றும் தேவன், மனுஷ்யன் முதலிய பேதங்கள் பொய்யானவை, எல்லா ஜீவன்களும் ஞானைகாகாரர்களாய் ஸமானர்களாயிருப்பார்கள், அவர்களுடைய ஆகாரத்தில் பேதம் கிடையாது என்று பொருள். புராணங்களில் சொல்லப்படும் ஸ்வப்ந த்ருஷ்டாந்தத்திற்கு, ஸ்வப்நத்தில் காணப்படும் வஸ்துக்கள் போல, இந்த உலகம் தோன்றுவதும் மறைந்து போவதுமாய்க்கொண்டு [2]அஸ்திரமென்பதில் தாத்பர்யம்: ஆகையால் ஒரு ப்ரமாணத்தாலும் ப்ரபஞ்சம் இல்லை என்று புத்தி பிறக்கிறதில்லையாதலால், இது ஸத்யமென்று ஸித்திக்கிறது.

---

1. निमित्तकारणम्— பானைக்குக் குயவன் நிமித்தகாரணம். மண் உபாதான காரணம் (उपादान);
2. अस्थिरं— நிலையற்றது.

## ॥ श्रीमन्नारायणस्य जगदीश्वरत्वनिरूपणम् ॥

## ஸ்ரீமந் நாராயணனுக்கு ஜகதீச்வரத்வ நிருபணம்

இப்படி ஸத்யமாக நிரூபிக்கப்பட்ட ப்ரபஞ்சத்திற்கு ஸ்ரீயஃபதியான ஸ்ரீமந்நாராயணனே ஈச்வரன். இவனுக்கு ஒரு ஈச்வரனில்லை. நாராயணநுவாகத்தில் நாராயணனைத் தொடங்கி 'இவன் ப்ரபஞ்சத்திற்கு ஈச்வர' னென்றும், 'ஆத்மேச்வர' னென்றும், சொல்லப்பட்டிருக்கிறது. இங்கு 'ஆத்மேச்வரன்' என்பதற்குத் தனக்குத்தானே ஈச்வரன் என்று பொருளாய் தனக்கு வேறு ஈச்வரனில்லை என்று சொன்னதாகிறது. [1]ச்வேதாச்வதரம் முதலான சில உபநிஷத்துக்களில் [2]சிவனுக்கு ஜகதீச்வரத்வம் சொல்லுவதாகத் தோன்றினாலும், அங்குள்ள சிவசப்தம் முதலான சப்தங்களுக்கு 'சுத்தன்' 'க்ஷேமத்தைச் செய்பவன்' என்று பொருளாய் நாராயணனையே சொல்லுகிற தென்று கொள்ளவேண்டும். இருவரும் ஈச்வரர்கள் என்றாவது, சில [3]கல்பங்களில் சிவன் ஈச்வரன், சில கல்பங்களில் நாராயணன் ஜகதீச்வரன் என்றாவது இரண்டு ச்ருதிகளுக்கும் தாத்பர்யம் கொள்ளக்கூடாதோ வென்றால்; அப்போது ஈச்வரர்கள் அனேகரென்றும் ஒவ்வொருவருக்கும் [4]ஈச்வரத்வம் [5]வந்தேறி யென்றும் ஏற்படுகிறபடியால், 'ப்ரபஞ்சத்திற்கு ஒருவன் "[6]சாஸ்தா இரண்டாவது சாஸ்தா கிடையாது' என்று சொல்லும் ச்ருதிகளுக்கும், 'சிவன்தான் ஜகதீச்வரன்' என்று தொடங்கி 'அவனுக்கு ஜகதீச்வரத்வம் [7]ஸ்வதஸ்ஸித்தம்,

---

1. श्वेताश्वतरम्—
2. ஸர்வ ஜகத்துக்கும் ஈச்வரனாயிருக்குந் தன்மை சிவனுக்கே உள்ளது.
3. कल्पः—ப்ரஹ்மாவினுடைய ஒரு நாள் (1000 யுகங்கொண்டது).
4. ईश्वरत्वं —ஈச்வரனாயிருக்குந்தன்மை.
5. வந்தேறி—புதிதாக வந்தது.
6. शास्ता:—ஆள்கிறவன்.
7. स्वतः सिद्धः—ஸ்வபாவமாகவே ஒரு காரணத்தை எதிர்பாராமல் உள்ளது.

ஒரு காரணத்தால் வந்ததன்று' என்று சொல்லுகிற ச்வேதாச்வதர ச்ருதிகளுக்கும் விரோதம் வரும்.

ஆனால் நாராயணசப்தத்திற்கு ருத்திரன் பொருள் என்று சொல்லி ருத்திரனே ஜகதீச்வரன் என்று ஏன் சொல்லக்கூடாதென்று ஆக்ஷேபம் பண்ணக்கூடும். நாராயணசப்தம் ஒருவனுக்கே பெயராய் மற்றொரு தேவதையைச் சொல்லயாட்டாது. சம்பு சிவன் முதலிய சப்தங்கள் அநேகார்த்தமுள்ளதாக நிகண்டுக்களில் சொல்லப்பட்டிருப்பதால், அந்த சப்தங்கள் பொதுவானதாய், நாராயணனையும் சொல்லக் கூடியவை. ஆகையால் சிவ சம்ப்வாதி சப்தங்களால் சில உபநிஷத்துக்களில் ஜகதீச்வரன் சொல்லப்பட்டிருந்தாலும், அவைகள் நாராயணனுக்கே பெயராய் அங்கும் அவனொருவனுக்கே ஜகதீச்வரத்வம் சொன்னதாய் முடிகிறது.

இவன் ஈச்வரனகையாவது, இப்பிரபஞ்சம் எல்லாவற்றிற்கும் உடையவனும் [1]நியமிக்கிறவனும் [2]ஆள்கிறவனுமிருக்கை. ஸ்வாமித்வம் முதலான கீழ்ச்சொன்ன குணங்கள் இவனுக்கு ஸ்வாபாவிகமாய் எப்பொழுது முள்ளதாயிருக்கும். இவனுடைய ஸ்வரூபத்தில் கை கால் முதலிய அவயவங்களொன்றும் கிடையாது. இந்த ஈச்வர ஸ்வரூபம் எங்கும் வ்யாபித்து இருக்கும். இது பரவாத தேசமில்லை. இப்படியெங்கும் பரவி இருந்தாலும், அங்காங்குள்ள ஆசுத்தங்கள் இதில் ஸம்பந்தப்படுவதில்லை. ஸம்பந்தப்படாமலிருப்பதற்கீடான சக்தி இந்த ஸ்வரூபத்திற்கு ஸ்வாபாவிகம். இது சுவர் முதலான வஸ்துவினாலும் தடைபடுவதில்லை. ஆகையால் எல்லா வஸ்துக்களிலும் உள் புகுந்து இருக்கும். இதில் ராகம், த்வேஷம், லோபம், மோஹம் முதலிய துர்குணங்கள் ஒன்றும் ஒரு காலத்திலும் கிடையாது. இந்த ஸ்வரூபம் தனக்கும் பிறருக்கும் அனுபவிக்க அனுபவிக்க த்ருப்தியில்லாதபடி மேல்மேல் அனு

---

1. ஆஜ்ஞாபிக்கிறவன்:
2. ஆள்கிறவன்-வஸ்துக்களை தன்னிஷ்டப்படி உபயோகப் படுத்திக் கொள்ள வல்லவன்.

பவத்தில் ஆசையுண்டாக்குகிற ஆநந்தரூபமாயிருக்கும். இது ஒருக்காலும் மாறுதலின்றிக்கே எப்போதும் ஏகரூபமாயிருக்கும். இதில் சிவப்பு, வெளுப்பு, கருப்பு முதலிய ரூபங்களொன்றும் கிடையாது. ஆகையால் கண்ணுக்கு விஷயமாகாது. இதை சாஸ்த்ரத்தைக்கொண்டு பரோக்ஷரூபமாயும், யோகத்தினல் ப்ரத்யக்ஷமாயும் காணமுடியும். இந்த ஈச்வரனுக்கு ஜீவாத்மாக்களான நம்மோடு மாதாவென்றும், [1]பிதாவென்றும், [2]ப்ராதாவென்றும், [3]விச்ரமஸ்தானமென்றும், [4]ஸுஹ்ருத் என்றும், அடையவேண்டிய பயன் என்றும், அதை அடைவிக்கிறவன் என்றும் இது முதலான பல ஸம்பந்தங்கள் உண்டு. ஜீவாத்மாக்களான நாம் இவனுக்கு எல்லாகைங்கர்யங்களையும் செய்யக் கடமைப்பட்டவர்கள். இவனலே எல்லா ஸமயங்களிலும் ஆபத்துக்களிலிருந்து காப்பாற்றப்படுகிறோம். இவன் நம்மை ஆபத்திலிருந்து ரக்ஷிக்கும்போது சில காலத்தில் சில சேதனரைக் கொண்டும், சில காலத்தில் ந்ருஸிம்ம ராமக்ருஷ்ணாத்யவதாரங்களால் நேராகவும் ரக்ஷிக்கிறான். ஈச்வர [5]ஸங்கல்பமில்லாமல் ஒரு கார்யமும் நடவாது. இவன் தன் ஸங்கல்பத்தினல் நமக்காகவே இந்த ஜகத் ஸ்ருஸ்டி முதலான வ்யாபாரங்களைச் செய்கிறான்.

அதாவது, நாம் செய்த புண்யபாபங்களுக்கிடாக நமக்கு ஸுகம், துக்கம் முதலிய அனுபவங்களைக் கொடுக்க ப்ரபஞ்சத்திலுள்ள வஸ்துக்களை ஸ்ருஷ்டிக்கிறான். இவைகளில் சிலது [6]போக்யமாயும், சிலது [7]போகஸாதனமாயும் நாம் போக்தாவா

---

1. पिता —தந்தை.
2. भ्राता —ஸஹோதரன்.
3. विश्रमस्थानं —இளைப்பாறுமிடம்.
4. सुहृत् —சிநேகிதன்.
5. सङ्कल्प —ஒரு கார்யத்தை நடத்த வேண்டும் என்கிற நினைவு.
6. भोग्यं—ஸ்வயம் ஆனந்தத்தைக் கொடுப்பதான, பால் பழம் போன்றவை.
7. भोगसाधनं—அவைகளுக்கு வேண்டிய தங்கக்கிண்ணி தாம்பாளம் முதலியன.

யும் ஏற்படுகிறோம். சேதனர்களுக்கு துக்கத்தை சில காலங்களில் உண்டாக்கின போதிலும் ஈச்வரன் ஸ்வபாவத்தில் [1]பரம காருணிகன். இவன் துக்கத்தைக் கொடுப்பது நமக்கு தண்டனை ரூபமாய் இவன் [2]ஸஹஜக்ருபைக்கு விருத்தமாகமாட்டாது. ஈச்வரன் ஒருவன் உண்டென்று நாம் நம்பாமலிருந்தாலும் அவன் கார்யங்கள் நம்மிடத்தில் நடந்தே விடும். நம்பினோமாகில் மிகவும் க்ஷேமமுண்டாகும்.

இவனுடைய குணங்களெல்லாம் [3]பரோபகாரார்த்தமாகவே யிருக்கிறபடியால் இவனை கல்யாணகுணவான் என்று ஸகல ச்ருதிகளும் ஸ்ம்ருதிகளும் சொல்லுகின்றன. ஸர்வஜ்ஞத்வம் முதலான இவனுடைய குணங்களை இவ்வளவு என்று எண்ணடியாது. [4]ஸர்வஜ்ஞத்வமாவது—எப்பொழுதும் எல்லா வஸ்துக்களையும் உள்ளது உள்ளபடியே பார்ப்பது. [5]ஸர்வசக்தித்வமாவது—நினைத்ததை நினைத்தபடியே முடிக்க சக்தியுண்டாயிருக்கை. இந்த சக்தி பலவிதம். ஸத்யகாமத்வமாவது—போக்யமான வஸ்துக்கள் நினைத்த போது ஸித்தமாயிருக்கை. [6]ஸத்யஸங்கல்பத்வமாவது-தான் [7]ஸங்கல்பித்ததற்கு ஒருவராலும் தடையில்லாமல் ஸங்கல்பித்தபடியே நிறைவேற்றுகை. [8]பரமோதாரத்வமாவது—ஆச்ரிதர்களுக்கு அவர்களபேக்ஷித்ததற்கு அதிகமாகவே கொடுத்தும், 'நாமென்ன கொடுத்தோம்'

---

1. परमकारुणिकः—அதிகமான தயவுள்ளவன்.
2. सहजकृपा—ஸ்வபாவமாகவே உள்ள தயவு.
3. परोपकारार्थं—பிறருக்கு உதவுவதற்காகவே.
4. सर्वज्ञत्वं எல்லாம் அறிந்தமை.
5. सर्वशक्तित्वं எல்லா சக்தியுடைமை.
6. ஸர்வேச்வரன் விபீஷணாழ்வானை ரக்ஷிக்க ஸங்கல்பித்த போது (நினைத்த போது) ஸுக்ரீவன் அங்கதன் முதலான தம்முடைய அந்தரங்கமான மந்திரிகள் தடுத்தபோதிலும் அந்த ரக்ஷண ஸங்கல்பம் தடையில்லாமல் நிறைவேறிற்று. பாணாஸுரனை சிக்ஷிக்க (தண்டிக்க) ஸங்கல்பித்தபோது, சிவன், ஸுப்ரஹ்மண்யன் முதலானவர்கள் குறுக்கே விழுந்த போதிலும் அவனை தண்டித்தே விட்டான்.
7. நினைத்ததற்கு.
8. परमोदारत्वम् மிக்கபெருந்தகையாயிருத்தல்.

என்றிருக்கை. இவைகளையெல்லாம் குசேலர் விஷயத்தில் காண லாம். [1]க்ருதஜ்ஞதையாவது-தன் விஷயத்தில அல்பம் செய்தா லும் அதை எப்போதும் அதிகமாக நினைத்திருக்கை. [2]ஆச்ரித வத்ஸலத்வமாவது—ஆச்ரிதர்களிடத்தில் எவ்வளவு குற்றமிருந் தாலும் அதைப் பாராதது போலிருக்கை. குற்றத்தையே [3]உப ஹாரமாக நினைத்திருக்கை என்று சொல்லுவாரும் உண்டு.

[4]ஸௌசீல்யமாவது—தான் எல்லோரையும்விட ஸர்வப் ரகாரத்தாலும் உத்தமனுயிருந்தும், ஜாதி, குணம், நடத்தை எல்லாவற்றிலும் மிகவும் தாழ்ந்தவர்களுடன், ஸஹோதரர் களோடு போல ப்ரியமாகப் பழகுந்தன்மை. இதை கோபாலர் கள், குஹன், இவர்கள் விஷயத்தில் காணலாம். [5]ஸௌலப்ய மாவது ஆச்ரிதர்கள் நினைத்த மாத்திரத்தில் அவர்களிருக்கு மிடத்திற்குத் தானே வந்து கிட்டுகை. [6]ஆச்ரிதபாரதந்த்ரிய மாவது—தான் ஸர்வேச்வரனுயிருந்தும் ஆச்ரிதரிட்டவழக் காக அவர்கள் இடும் ஏவல் தொழில்களை, தன்மேன்மைக்குத் தகாததாயிருந்தாலும் மிக அன்புடன் இவ்வளவு கிடைத்ததே என்று செய்வது. இதை பாண்டவர்கள் விஷயத்தில் காண லாம். இவை முதலான எண்ணிறந்த மஹாகுணங்கள் ஸர்வேச் வரனுக்கு [7]ஸ்வபாவஸித்தங்களென்று ச்வேதாச்வதரோபநிஷத் தில் சொல்லப்பட்டிருக்கிறது. இவனுக்கு அஜ்ஞானம் ஒருக் காலும் கிடையாது.

இவனுக்குக்கல்யாண குணங்கள் [8]ஸ்வாபாவிகமாகில், ச்ருதியில் ப்ரஹ்மம் நிர்குணம் என்று சொல்லியிருப்பது எப் படி உபபந்நமாகும் என்ருல்—நிர்குணம் என்பதற்கு துர்

---

1. कृतज्ञता நன்றி
2. आश्रितवत्सलत्वं தன்னை அடைந்தாரிடத்தில் அன்புடன் இருத்தல்.
3. उपहार—பகவந்-நிவேதநத்திற்கான வஸ்து.
4. सौशील्यं ஒன்றுபட்டு இணங்குதல்.
5. सौलभ्यं எளிமை.
6. आश्रितपारतन्त्र्यं தன்னையடைந்தாரிடம் அவர்கள் வசமாயிருத்(தல்)
7. स्वभावसिद्धं இயற்கையாகவே ஏற்பட்டது.
8. स्वाभाविकं—ஸ்வபாவத்திலேயே உள்ளது.

குணம் ஒன்றும் கிடையாது என்பதில் தாத்பர்யம். குணசப்தம் நல்ல குணங்களுக்கும் துர்குணங்களுக்கும் பொதுவானது. ஆகையால் ச்வேதாச்வதரோபநிஷத்தில் ஈச்வரனை 'குணீ' என்று [1]ஸாமாந்யமாய் குணவானென்றும், இன்னும் பல உப நிஷத்துக்களில் விசேஷித்து அந்தந்தக் கல்யாணகுணங்களையுடையவன் என்றும் ச்ருதிக்கு துர்குணம் ஒன்றுமில்லை என்றே தாத்பர்யம் கொள்ளவேண்டும். [2]அதவா குணமென்று ப்ருக்ருதியிலுள்ள ஸத்வம், ரஜஸ், தமஸ் என்று குணங்களுக்குப்பேராய் ஸர்வேச்வரனிடத்தில் இந்த குணங்களில்லை என்றும் கொள்ளலாம்.

இப்படி ஸகல கல்யாண குணங்களோடும் கூடினவனான ஸர்வேச்வரனுக்கு, அபராதம் செய்தவர்களை அவர்களுடைய ஹிதத்திற்காக தண்டிப்பது ஸ்வபாவமாகையால், இந்த சேதனர்களுடைய அபராதத்தை அவனைப் பொறுக்கும்படி செய்ய ஒரு [3]புருஷகாரமுண்டு. இந்த புருஷகாரம் செய்பவளைத்தான் லக்ஷ்மீ என்கிறது. இவளும் ஸர்வேச்வரனைப் போலவே அநந்தமான கல்யாண குணங்களையுடையவள். இவள் அவனுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தில் தானொரு திவ்ய மங்கள விக்ரஹத்தோடு எப்போதும் பிரியாமலிருக்கிறாள்.

## ॥ श्रीमन्नारायणस्य परब्रह्मत्वसर्वशरीरकत्वनिरूपणम् ॥

## ஸ்ரீமந் நாராயணனுக்கு பரப்ரஹ்மத்வ ஸ்ர்வசரீரகத்வ நிரூபணம்

இந்த ஸ்ரீய:பதியான ஸ்ரீமந்நாரயணன்தான் உபநிஷத் முதலானவைகளில் பரப்ரஹ்மமென்று சொல்லப்படுகிறான்: அந்தந்த உபநிஷத்துக்களில் ''பரப்ரஹ்ம' மென்றும், 'பரதத்வ

---

. 1. सामान्य —பொதுவில்.

2. अथवा—அல்லது.

3. पुरुषकार—மேற்பட்டவர்களோடு நமக்காக பரிந்து பேசுவது.

மென்றும் 'பரஜ்யோதிஸ்' என்றும் 'பரமாத்மா' என்றும் சொல்லப்படுகிறவன்', நாராயணனே என்று நாராயணாநுவாகத்தில் சொல்லப்பட்டிருக்கிறபடியால் இந்த அம்சம் கிடைக்கிறது. இவன் ப்ரஹ்மம் என்று சொல்லப்படுவது எதனால் என்று ஒரு உபநிஷத்து கேட்டுக்கொண்டு' இவனிடத்தில் பெருமையுள்ள அநேக குணங்களிருப்பதால் இவன் ப்ரஹ்மமென்று சொல்லப்படுகிறான் என்று உத்தரம் சொல்லியிருக்கிறது. அதனால் இவனே ப்ரஹ்மமென்றும் இவனுக்கு மேற்பட்ட நிர்குண ப்ரஹ்மமென்று ஒன்று கிடையாது என்றும் தெரிகிறது. இந்த குணங்களெல்லாம் இவனுக்கு ஸ்வாபாவிகங்களென்று ச்வேதாச்வதரோபநிஷத் சொல்லுகிறது என்று முன்பே சொன்னோம்.

சேதநாசேதனரூபமான ஸர்வப்ரபஞ்சமும் இவனுக்கு சரீரமாயிருக்கும். கை கால் முதலான அவயவங்களோடும் கண் காது முதலிய இந்திரியங்களோடும் கூடினதன்றோ சரீரமென்பது? அப்படி யில்லாத சேதநாசேதன வஸ்துக்களைச் சரீரமென்று எப்படிச் சொல்லக்கூடுமென்றால், கீழ்ச்சொன்ன சரீர லக்ஷணம் சரீரம் என்று சொல்லப்படும் எல்லாவற்றிற்கும் பொதுவாகமாட்டாது. மனுஷ்யசரீரம் ஒருவிதமாயும், பசு பக்ஷிகளின் சரீரம் மற்றொரு விதமாயும், பாம்பு, தேள், முதலியவைகளினுடையது வேறுவிதமாயும் இருக்கிறது. செடி, கொடி, புல், மலை முதலிய ஸ்தாவரங்களின் சரீரங்கள் ஒவ்வொன்றும் வேறு வேறு விதமாக இருக்கின்றன. இருந்தாலும், இவைகளையெல்லாம் சரீரம் என்றே லோகத்திலும் சாஸ்திரத்திலும் வ்யவஹாரம் இருக்கிறது. [1]ப்ருஹதாரண்யகோபநிஷத்தில் அந்தர்யாமிப்ராஹ்மணத்தில் ப்ருதிவீ, ஜலம், தேஜஸ், வாயு, ஆகாசம் ஆகிய பூதங்களையும் அவைகளின் விகாரமான [2]பௌதிகங்களையும் ஜீவாத்மாவையும் தனித்தனியே எடுத்து, ஒவ்வொன்றும் பரமாத்மாவிற்குச் சரீரம் என்று ஆதரவு தோன்றும்படி அடிக்கடி சொல்லியிருக்கிறது. இப்படியே ஸுபாலோபநிஷத்திலும் 'ப்ருதிவீ முதலியவை பரமாத்மாவுக்குச் சரீரம் என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

---

1. बृहदारण्यकोपनिषत्—अन्तर्यामिब्राह्मणम्
2. भौतिक பூதங்களினின்றும் உண்டானவை.

ச்ருதிகளில் சரீரமென்று இருக்கிற வ்யவஹாரங்களெல்லாம் வேறு எதோ ஒரு தாத்பர்யத்தைக்கொண்டு வந்ததேயொழிய சரீரமென்று சொல்ல வந்ததல்ல என்று சொல்ல முடியாது. தாத்பர்யத்திற்கு [1]ஞாபகமாக சாஸ்த்ரஜ்ஞர்கள் ஒப்புக்கொண்டிருக்கிற அப்யாஸம், அபூர்வதை, உபபத்தி முதலியவைகள் இங்கே இருப்பதால் இவையெல்லாம் பரமாத்ம சரீரமென்று சொன்னதற்கு மற்ற சரீரம்போல் சரீரமென்பதிலேயே தாத்பர்யம் என்பது தெரிகிறது.

[2]அப்யாஸமாவது — சொன்னதை திருப்பித்திருப்பிச் சொல்லுவது. [3]அபூர்வதையாவது—மற்றொரு ப்ரமாணத்தால் அறியப்படாமலிருக்கை. [4]உபபத்தியாவது-யுக்தியைக் கொண்டு அதை நிரூபிக்கை. இந்த மூன்றும் இங்கே காணப்படுகின்றன. அப்யாஸம் முன்னமேயே காட்டினோம். இந்தவிஷயம் ப்ரத்யக்ஷம் அநுமானம் இவைகளால் கிடைக்காதாகையால் அபூர்வதையுமிருக்கிறது. இவைகளைச் சரீரமென்றுசொல்லி, அவன் உள் புகுந்து நியமிக்கிறான் என்று சொல்லுகிறபடியால் யுக்தியைக் கொண்டு உபபாதநம் செய்ததாகிறது. இங்கே யுக்தியாவது உள்புகுந்து நியமிக்கப்படுகின்றன என்பது. இப்படி மூன்று லிங்கங்களும் காணப்படுகிறபடியால் இந்த சராசரங்களெல்லாம் பரமாத்மசரீரம் என்பதில் தாத்பர்யம் ஒப்புக்கொள்ள வேண்டும். ஆகையால் லோகத்தில் அல்லது வேதத்தில் சரீரமென்று வ்யவஹரிக்கப்படும் த்ரவ்யமெல்லாம் சரீரமென்றே ஒப்புக்கொள்ளவேண்டும். சரீரம் என்று பெயருடையதற்கு ஒரு [5]லக்ஷணத்தைச் சொல்லி, அந்த லக்ஷணம் இல்லாதது சரீரம் அன்று என்று சொல்லுவது சரீர-ஸ்வரூபத்தைப் பரிசீலிக்கிறவர்களுடைய க்ருத்யமன்று. லோகத்திலோ சாஸ்த்

---

1. तात्पर्यज्ञापकलिङ्ग—அபிப்ராயத்தைத் தெரிவிக்கும் காரணங்கள்.
2. अभ्यास: மறுபடியும் மறுபடியும் சொல்லுவது.
3. अपूर्वता இதற்கு முன்பு ஏற்படாதிருத்தல்.
4. उपपत्ति: ஸமாதானம் சொல்லுதல்.
5. लक्षण—ஒரு வஸ்துவை மற்ற வஸ்துக்களிலிருந்து பிரித்து அறிவிக்கும் அடையாளம்.

ரத்திலோ சரீரம் என்று சொல்லப்படும் வஸ்துக்களுக்கெல்லாம் பொதுவாய் அடையாளம் காட்டுவது சரீரஸ்வரூப சோதகர்களுடைய க்ருத்யம். ஆகையால் சரீரமென்று சொல்லப்படும் எல்லாவற்றிற்கும் பொதுவாயும், அப்படிச் சொல்லப்படாத வஸ்துக்களில் இராததாயும் உள்ள ஒரு அடையாளம் சொல்ல வேண்டும். அந்த அடையாளமாவது, சரீரஸ்வபாவத்தைச் சோதித்தால் இப்படி ஏற்படுகிறது-'' ஒரு சேதனனேடு சேர்க்கை யுள்ளவரையிலிருந்து அவனை விட்டுப் பிரித்தால் அழிந்துபோகும்யோக்யதையுள்ள ஆகாரத்தோடுகூடியிருக்கும் த்ரவ்யம் அந்த சேதனனுக்குச் சரீரம்.'' இது நம் சரீரஸ்வபாவத்தையோசித்தால் ஏற்படுகிறது. இந்த சரீரமானது ஜீவாத்மாவோடு ஸம்பந்தித்து, அந்த ஸம்பந்தம் உள்ளவரையில் இருந்து, ஜீவாத்மா இதைவிட்டுப் பிரிந்தால் அழிந்துபோகிறது. இதற்குக் காரணம் இந்த ஜீவன் இந்த சரீரத்திற்குள் புகுந்து தன் ஸ்வரூபத்தாலும் தன் ஞானத்தாலும் இந்த சரீரத்தின் ஆகாரம் குலையாதபடி தரிக்கிறன் என்பதே.

ஸத்வம், ரஜஸ், தமஸ் என்று சொல்லப்படும் மூன்று குணங்கள் உள்ளதாய், இந்த ப்ரபஞ்சங்களுக்கெல்லாம் மூல காரணமாய் ப்ரக்ருதி என்று சொல்லப்படும் ஒரு வஸ்து மாறி மாறி வரும் தசையில் இந்த ஜீவனுடைய புண்ய-பாப-கர்மங்களுக்குப் பலங்களான ஸுக-து:க்கங்களை இவன் அனுபவிப்பதற்காக இவன் கர்மத்தால் ஒரு விகாரத்தை யடைகிறது. இந்த விகாரம்தான் சரீரம். இதில் ஜீவன் உள் புகுந்து தன் ஸ்வரூபத்தாலும் தன் ஞானத்தாலும் இந்த சரீரத்தைத் தாங்குகிறன். விழித்துக் கொண்டிருக்கும்பொழுது ஞானத்தால் தாங்குகிறன். புருஷன் நடக்கும்போது மெய் மறந்தால் அந்த சரீரம் தரையில் விழுந்து விடுகிறது. விழித்துக்கொண்டானுகில் எழுந்து விடுகிறது. ஆகையால் அப்போது ஞானத்தால் தாங்குகிறன் என்று கிடைக்கிறது. நல்ல தூக்கத்தில் ப்ரபஞ்சஜ்ஞானமில்லையாதலால் தரையில் விழுந்துக் கிடக்கும் சரீரத்தை அதன் உருவம் குலையாதபடி தன் ஸ்வரூபத்தால் தாங்குகிறன். இந்த ஜீவன் இந்த சரீரத்தை விட்டுப் பிரிந்தானுகில் சரீரம் உருவம் குலைந்து அழிந்து விடுகிறது. இது சரீரம் என்று சொல்லப்படும் எல்லாவற்றிற்கும் பொதுவானது.

ப்ருதிவீ, ஜலம், தேஜஸ், வாயு, ஆகாசம் முதலான பூதங்களுக்கும் அந்த பூதங்களின் பரிணாமமான பௌதிகபதார்த்தங்களுக்கும் எப்போதும் ஈச்வரனைவிட்டுப் பிரிவு இல்லையேயாகிலும், பிரிந்தால் அழிந்து போகும் யோக்யதையுண்டு. இவையெல்லாம் ஈச்வரனுடைய ஸங்கல்பத்தால் தரிக்கப்பட்டு அழியாதபடி இருக்கின்றன. அவன் ஸங்கல்பம் மாறியபோது அந்த ரூபம் குலைந்து போகிறது. ஆகையால் இவைகளெல்லாம் ஸர்வேச்வரனுக்குச் சரீரமாகத் தடையில்லை. ஜீவாத்மாவிம் ஈச்வரனுடைய நித்ய ஸங்கல்பத்தால் ஸ்வரூபம் குலையாதபடி தாங்கப்படுகிறான். ஈச்வரனுடைய ஸங்கல்பமில்லையாகில் ஜீவாத்மாவின் ஸ்வரூபமும் குலைந்துவிடலாம். ஈச்வரன் இந்த வஸ்துக்கள் மாறுபாடில்லாமல் இப்படியே எப்போதும் இருக்கவேண்டுமென்று ஸங்கல்பித்தால் அந்த வஸ்துக்களெல்லாம் அப்படியே நிற்கின்றன. இது அப்போதைக்கப்போது மாறுபாடுகளை அடையக்கடவது என்று ஸங்கல்பித்தால் அப்படியே ஆகிறது. சேதனாசேதனவஸ்துக்களெல்லாம் ஈச்வரனுக்கு பரதந்த்ரமாயிருக்கையே இவையெல்லாவற்றிற்கும் காரணம்.

ஆகையால் எல்லாவஸ்துக்களும் பரமாத்மாவினுடைய சரீரமாய், பரமாத்மா எல்லா வஸ்துக்களுக்கும் ஆத்மாவாகிறான். ஆத்மாவாவது தன் ஸ்வரூபத்தாலும் ஞானத்தாலும் தரிக்கிறவன். எந்த வஸ்துவை எவன் இப்படி தரிக்கிறானோ அந்த வஸ்துவுக்கு அவன் ஆத்மா. இவைகளெல்லாம் ச்ருதி–ஸித்தம்.

இந்த [1]சரீராத்மபாவத்தை மற்ற ஸித்தாந்திகள் ஒப்புக்கொள்ளாமல் இந்த ஸித்தாந்திகள் மாத்திரம் ஒப்புக்கொள்ளுகிறபடியால், இது இந்த ஸித்தாந்தத்திற்கு முக்யாம்சம்; இதையறிந்தால் ஜீவனுக்கும் ஈச்வரனுக்கும் அபேதம் சொல்லுவதுபோல் தோன்றும் சில ச்ருதிகளின் வாஸ்தவ தாத்பர்யம் நன்றாய் ஏற்படும். அந்த தாத்பர்யமாவது, 'ஈச்வரன் ஸர்வ-அசேதன-சரீரகன், ஸர்வ-சேதன-சரீரகன், என்பதுதான். இந்த அம்சம் மேல் விவரிக்கப்படும்.

---

1. शरीरात्मभावः உடல் ஆத்மா என்ற நிலை.

# जीवेश्वरभेदनिरूपणम्

## ஜீவேச்வரபேதநிருபணம்

எங்கும் பரவி ஸஞ்சாரமில்லாத ப்ரஹ்மத்தின் ஸ்வரூபம் போலன்றிக்கே, ஜீவாத்மாவின் ஸ்வரூபம் ஸ்வபாவத்திலேயே மிகவும் அணுவாய், ஸஞ்சாரத்தோடு கூடியதாயிருக்கும்; இந்த ஸ்வரூபம் மாறுதலில்லாமல் எப்போதும் ஏகரூபமாயிருக்கும். ஈச்வர ஸ்வரூபம்போல இதுவும் அனுபவிக்க அனுபவிக்க த்ருப்தியில்லாதபடி ஆனந்தரூபமாயிருக்கும். ஆனால் ஈச்வர-ஸ்வரூபாநுபவ - ஆநந்தத்திற்கும் ஜீவாத்ம - ஸ்வரூபாநுபவ ஆனந்தத்திற்கும் மேருபர்வதத்திற்கும் கடுகுக்கும் போல மிக ஏற்றத்தாழ்வு உண்டு. இதற்கும் அழிவுகிடையாது. இந்த ஜீவாத்மஸ்வரூபத்திலும் கைகால் முதலிய அவயவம் ஒன்றும் கிடையாது

வெளியில் தென்படும் வஸ்துக்கள் தன்னைத்தான் காட்டிக் கொடுக்கமாட்டாமல், தன்னைக்காட்டிக் கொடுப்பதற்கு வேறொரு வெளிச்சத்தை அபேக்ஷிக்கிறுப் போலன்றிக்கே இந்த ஸ்வரூபம் எப்போதும் 'நான்' 'நான்' என்று தானே தன்னை தனக்குக் காட்டும். இதுதான் வெளியிலுள்ள வஸ்துக்களுக்கும் இந்த ஆத்மாவுக்கும் உள்ள வாசி. ஈச்வரஸ்வரூபமும் இப்படிப் பட்டது தான். இதைக்கொண்டுதான் வெளியில் காணப்படும் வஸ்துக்களை ஜடமென்றும் ஆத்மாவை ஞானஸ்வரூபமென்றும் சொல்லுகிறது.

ஆனால் இந்த ஸ்வரூபமும் ஈச்வரஸ்வரூபமும் அயலாருக்குத் தன்னைக்காட்டும்போது, அவர்களுடைய ஞானத்தை யபேக்ஷிக்கும். ஜீவனுக்கும் ஈச்வரனுக்கும் தன்னைக்காட்டிலும் வேறொருவஸ்துவை அறிவதற்கு ஞானம் என்று வேறொரு வஸ்து உண்டு. அது தீபத்திற்கு [1]ப்ரபைபோல, எப்போதும் இந்த ஸ்வரூபத்தை ஆச்ரயித்தேயிருந்து வெளியிலும் பரவும்.

---

1. प्रभा—ப்ரகாசம்

இதைத்தான் ஆத்மஸ்வரூபத்தை யாச்ரயித்திருப்பதால் [1]தர்ம பூதஞானமென்று சொல்லுகிறது. இதைக்கொண்டுதான் வெளியில் தென்படும் ஜடவஸ்துவுக்கும் இந்த ஆத்ம ஸ்வரூபத்திற்கும் வாசி ஏற்படுகிறது. இந்த தர்மபூதஜ்ஞானம் இவ்வாத்ம ஸ்வரூபங்களுக்கெல்லாம் ஸ்வாபாவிகமாயுள்ளது. இந்த ஞானத்திற்கும் அழிவு இல்லை, ஆனால் [2]ஸங்கோசம் [3]விகாஸம் என்கிற மாறுபாடுண்டு. இது எப்போதும் எங்கும் பரவியிருக்கும் ஸ்வாபவமுள்ளது. ஆனால் ஆத்மாவினுடைய தர்மபூத ஜ்ஞானத்திற்கு ஸம்ஸாரதசையில் புண்யம் பாபம் என்கிற கர்மத்தால் ஸங்கோசவிகாஸங்களுண்டு. ஸம்ஸாரதசையிலிருக்கும் ஜீவர்களுடைய தர்மபூதஜ்ஞானம் கண் முதலான ஞானேந்த்ரியங்களால் வெளியில் பரவும். இதைத்தான் விகாஸமென்று சொல்லுகிறது. இது கண்வழியாக ப்ரஸரிக்கும்போது நேரிலிருக்கும் வஸ்துக்களோடு ஸம்பந்திக்கும். அப்போது ''இதை நான் பார்க்கிறேன்'' என்கிற ஞானம் உண்டாகிறது. இந்த ஞானம் நேரிலிருக்கும் வஸ்துவையும் தன்னையும் காட்டும். நேரிலிருக்கும் வஸ்துவை 'இது' வென்றும், தன்னை 'பார்க்கிறேன்' என்றும் காட்டும். 'நான்' என்று ஆத்மா தன்னைத்தானே காட்டும். இப்படி ஞானங்கள்தோறும் ஆத்மாவும் வஸ்துக்களும் தர்ம பூதஜஞானமும் தோன்றிக்கொண்டே வரும். இந்த தர்மபூதஜ்ஞானம் தூக்கத்தில் தன்னையும் மற்றொரு வஸ்துவையும் காட்டமாட்டாது: ஆத்மாவோடு அடங்கிக்கிடக்கும். இதுதான் ஸுஷுப்தி. இதுதான் ஞானத்திற்கு ஸங்கோசம் என்று சொல்லப்படுகிறது.

இச்சை, ப்ரயத்னம், ஸுகம், துக்கம் முதலியவைகளெல்லால் இந்த தர்மபூதஜ்ஞானத்தின் பரிணாமங்கள். இந்த பரிணாமங்களைக்கொண்டு ஞாதா, கர்த்தா, போக்தா ஸுகி, துக்கீ,முத

---

1. धर्मभूतज्ञान—ஆச்ரயமாயுள்ள ஞானம் ஒன்று. அதுதான் ஆத்மா. அதை ஆச்ரயித்திருக்கும் ஞானம் மற்றொன்று. அது தான் தர்மபூதஜ்ஞானம்.

2. सङ्कोचः—சுருங்குதல்.

3. विकासः—பரவுதல்.

லிய வ்யவஹாரங்கள் நடக்கின்றன. இந்த வ்யவஹாரங்களெல்லாம் தர்மபூதஜ்ஞானத்திற்கும் அதன் பரிணாமமான ப்ரயத்னாதிகளுக்கும் ஆத்மாவோடு வாஸ்தவமான ஸம்பந்தத்தால் வருகிறபடியால், இவை ப்ரமத்தினால் வந்தவையன்று.

சில ச்ருதியில் 'ஞானம் இச்சை முதலானவை எல்லாம் மனஸ்ஸே' என்று சொல்லியிருப்பதற்கு, தர்மபூதஜ்ஞானத்திற்கு அந்தந்த விகாரம் உண்டாகும்போது மனஸ்ஸுக்கும் இச்சை ஸங்கல்பம் முதலிய பரிணாமம் உண்டாகையால் அந்த பரிணாமத்தைச் சொல்லியதில் அபிப்பிராயம். ஆனால் சருதியில் சொல்லப்பட்ட மனःபரிணாமவிசேஷங்களைக் கொண்டே, ஆத்மா ஞாதா கர்த்தா போக்தா இது முதலான வ்யவஹாரங்களை நிர்வஹிக்கலாமாயிருக்க, மனஸ்ஸின் பரிணாமமான ஞானம் ஒன்று, ஆத்மாவுக்கு தர்மபூதஜ்ஞானம் வேறொன்று என்று இரண்டு ஞானங்கள் ஏன் ஒப்புக்கொள்ள வேண்டுமென்று ஆக்ஷேபம் வருகிறது.

இதற்கு ஸமாதானம்:—

ஆத்மாவுக்கு, சேதனன் என்றும் ஞः என்றும், ஞாதா, கர்த்தா, போக்தா என்றும், இது முதலான வ்யவஹாரங்கள் ச்ருதியில் காணப்படுகின்றன. சேதனன் முதலானவைகளுக்கெல்லாம் ஞானவான் என்று அர்த்தம் சொல்லவேண்டும். இது மனःபரிணாமமான ஞானத்தின் ஸம்பந்தத்தைப்பற்றி வந்ததன்று. அப்படியானால் ஆத்மஸ்வரூபத்தைச் சொல்லும்போது சேதனன் முதலான வ்யவஹாரம் வராது. [1]வ்யாகரண வ்யுத்பத்தியால் பார்த்தால் ஞானத்திற்கு ஆச்ரயன் என்று ஏற்படுகிறது. ஆகையால் ஞானம் இவனுக்கு ஸ்வாபாவிகதர்மம் என்று ஒப்புக்கொள்ள வேண்டும். ஆகையால்தான் ஸ்ரீ விஷ்ணுதர்மத்தில்.

" तथा हेयगुणध्वंसादवबोधादयो गुणाः ।
प्रकाश्यन्ते न जन्यन्ते नित्या एवात्मनो हि ते ॥ "

---

1. இலக்கண நூலின் முறைப்படி.

ததா ஹேயகுணத்வம்ஸாதவபோதாதயோ குணா: ।
ப்ரகாச்யந்தே ந ஜந்யந்தே நித்யா ஏவாத்மனோ ஹி தே ॥

என்று ஆத்மாவுக்கு ஞானம் நித்யம் என்று சொல்லியிருக்கிறது. மன:பரிணாமமான ஞானத்தைக்கொண்டு வந்ததாகில், மனஸ்ஸுக்கு சேதனம் என்று வ்யவஹாரம் வரவேண்டிவரும். அப்படி வ்யவஹாரம் காணவில்லை. ஆகையால் மன:பரிணாம விசேஷரூபமான ஜடமான ஞானம் வேறு; ஆத்மாவுக்கு ஸ்வாபாவிகதர்மமான ஞானம் வேறு. இது ஆத்மாவினுடைய பரிணாமமன்று. தர்மங்களெல்லாம் தங்களுக்கு ஆச்ரயமான வஸ்துவின் பரிணாமமாகவே இருக்கவேண்டுமென்று நியமமில்லை.

இந்த ஜீவாத்மாக்கள் [1]அஸங்க்யேயர். இவர்களெல்லாரும் ஈச்வரனைக் காட்டிலும் வேறுபட்டவர்கள். ஒருவருக்கொருவரும் வேறுபட்டவர்கள். இது கடோபநிஷத்திலும் ச்வேதாச்வதரோப நிஷத்திலும் 'நித்யமான ஒரு சேதனன் நித்யரான பல சேதனர்களுக்கு அபேக்ஷிதங்களையெல்லாம் செய்கிறான்' என்று சொல்லியிருக்கிறபடியால் ஸித்திக்கிறது, அதே கடோபநிஷத்தில், 'ஜீவன் சரீரத்தோடு ஆழ்ந்து துக்கப்படுகிறான். தன்னைக்காட்டிலும் வேறு பட்ட ஈச்வரனை எப்போது ஸாக்ஷாத்கரிக்கிறானோ அப்போது சோகம் கழிந்தவனாகிறான்' என்று ஜீவேச்வரபேதம் ஸ்பஷ்டமாய்ச் சொல்லியிருக்கிறது. இப்படி ஜீவேச்வரபேதத்தைச் சொல்லும் பல ச்ருதிகளுண்டு.

ஒரு முகத்துக்கு பல கண்ணாடிகளில் பல ப்ரதிபிம்பங்கள் ஏற்படுகிறதுபோல, ப்ரஹ்மத்திற்கு பலவற்றில் ஏற்பட்ட பல ப்ரதிபிம்பங்களான ஜீவர்களை இந்த ச்ருதி சொல்லுகிறது என்று சொல்ல முடியாது. ப்ரதிபிம்பமாயிருந்தால், அதற்கு ஆதாரமான கண்ணாடி நசித்தபோது, ப்ரதிபிம்பமும் நசித்து அநித்யமாகிறாப்போல, இங்கும் ப்ரஹ்மப்ரதியிம்பத்துக்கு ஆதா

---

1. असख्येया:—கணக்கிட முடியாதவர்கள்.

ரமான அந்தக்கரணங்கள்[1] நச்வரங்களாக ஒப்புக்கொள்ளுகிறபடியால், அவை நசித்தபோது ப்ரஹ்மப்ரதிபிம்பமான ஜீவர்களும் நசித்து அநித்யர்களாக வேண்டி வந்து ஜீவர்களை நித்யர்களென்று சொன்னது அநுபபந்நமாய்விடும்.

லோகத்தில் ரூபமுள்ள வஸ்துவுக்கு ப்ரதிபிம்பம் கண்டோமே யொழிய ரூபமில்லாத வஸ்துவுக்குக் கண்டதில்லை. ஆகையாலும் ரூபமில்லாத ப்ரஹ்மத்தின் ப்ரதிபிம்பம் ஜீவர்கள் என்று சொல்லுவது அநுபபந்நம்.

ஜீவாத்மா ப்ரஹமத்தைக்காட்டில் வாஸ்தவமாய் வேறுபட்டிருந்தால், 'தத் த்வமஸி' என்கிற ச்ருதியில் ஜீவாத்மாவுக்கும் ப்ரஹ்மத்திற்கும், ஸ்வரூபைக்யம் சொல்லுவது எப்படி உபபந்நமாகும் என்றால், அதற்கு உபபத்தி சொல்லுகிறோம்.—இங்கே ஜீவப்ரஹ்மங்களுக்கு ஸ்வரூபைக்யம் சொல்லவில்லை. ப்ரஹ்மம் தான் ஒன்றே காரணமாகவும் கார்யமாகவும் இருக்கிறது என் காட்டுகிறது இந்த ச்ருதி.

இந்த அர்த்தத்தை மனதில் நன்றாய் வாங்கிக்கொள்வதற்காக ப்ரஹ்மத்தினுடைய ஜகத்ஸ்ருஷ்டிக்ரமத்தை இங்கே சொல்லுகிறோம்.

சேதநாசேதன ரூபமான ப்ரபஞ்சமெல்லாம் ப்ரஹ்மத்திற்கு சரீரமாக இருக்கிறது என்கிற அம்சத்தை ச்ருதிகளைக் கொண்டு முன்பே நிரூபித்தோம். ப்ரஹ்மத்திற்கு சரீரமான சேதநாசேதனமிரண்டிற்கும் [2]ஸ்தூலாவஸ்தை [3]ஸூக்ஷ்மாவஸ்தை என்று இரண்டு அவஸ்தைகளுண்டு. இதில் அசேதனமான ப்ரக்ருதிக்கு ஸ்தூலாவஸ்தையாவது - பஞ்சபூதங்களாயும் தேவமனுஷ்யாதிசரீரங்களாயும் ஆகுகை; ஸூக்ஷ்மாவஸ்தையாவது-அது நிவர்த்திக்கை. சேதனனுக்கு ஸ்தூலாவஸ்தையாவது - தேவமனுஷ்யாதிசரீரங்களின் ஸம்பந்தத்தால் வரும் ஞானவிகாஸம். ஸூக்ஷ்மாவஸ்தையாவது—அவனுடைய

---

1. नश्वर—அழியும் ஸ்வபாவமுள்ளது.
2. स्थूलावस्था இந்த்ரியங்களுக்குப் புலப்படும் நிலை.
3. सूक्ष्मावस्था இந்தரியங்களுக்குப் புலப்படாதநிலை.

ஞானத்திற்கு மிகவும் ஸங்கோசம். அதாவது அந்த ஞானம் ஒன்றையும் க்ரஹிக்கமாட்டாதபடி நிற்கை. இவ்விரண்டு அவஸ்தைகளிலும் சேதநாசேதனமிரண்டும் ப்ரஹ்மத்திற்கு சரீரமாய் ப்ரஹ்மம் சேதநாசேதன [3]சரீரகமாயே இருக்கும்.

ஒருவனுக்கு தன் சரீரத்தில் ஜாட்யமுண்டானால் அஸ்வஸ்த-சரீரகனாய் தன் சரீரம் ஒரு கார்யத்திற்கும் உதவாமலிருப்பதைக் கண்டு நாம் ஸ்வஸ்தநாகக்கடவோமென்று ஸங்கல்பித்து ஒரு உபயத்தாலே ஸ்வஸ்த சரீரகனாகிறாப்போல, ப்ரஹ்மம், ப்ரளயகாலம் வந்தவாறே தன் சரீரமான சேதநாசேதனங்கள் அதிஸூக்ஷ்மாவஸ்தையை அடைந்து [4]லீலாரஸத்திற்கு உபயுக்தமாகாத படியைக்கண்டு, அவையிரண்டையும் ஸ்தூலமாக்கி, ஸ்தூல-சேதநா சேதன சரீரகனாகக் கடவேன் என்று ஸங்கல்பித்து, தன்விசித்ரசக்தியாலே அசேதனத்திற்கு, க்ரமக்ரமமாய் தேவமனுஷ்யாதி சரீரமாகையாகிற ஸ்தூலாவஸ்தையையும், இந்த சரீர சம்பந்தத்தால் சேதனனுக்கு ஞானவிகாஸரூபமான ஸ்தூலாவஸ்தையையும் உண்டாக்கி, ஸ்தூலாவஸ்தையை அடைந்த சேதநாசேதன-சரீரகமாயாகிறது. இந்த அர்த்தம் 'அந்த மஹாபுருஷன் [5]ஏகாகியாயிருந்ததினால் [6]அரதியை அடைந்தான். பின்பு இந்த ப்ரபஞ்சத்தை ஸ்ருஷ்டித்தான் என்று சொல்லும் ச்ருதியில் ஸ்பஷ்டம். இங்கே ப்ரஹ்மத்திற்கு ஸூக்ஷ்ம-சிதசித்-சரீரகமாயிருக்கை காரணாவஸ்தை என்றும் ஸ்தூல சிதசிச் சரீரகநாகுகை கார்யாவஸ்தை என்றும் சொல்லப்படுகிறது. ஆகையால் காரணமும் கார்யமும் ஒரு ப்ரஹ்மமேயாகிறது. இதைச்சொல்லுகிறது 'தத் த்வமஸி' வாக்யம். இந்த அம்சங்களெல்லாம் ஸ்ருஷ்டிக்ரமத்தைச் சொல்லும் முன் வாக்யங்களை விசாரித்தால் அவைகளால் நன்றாய் ஏற்படும்.

---

3. शरीरक—(சேதநாசேதனங்களை) சரீரமாக உடையவன்.
4. लीलारसं—விளையாட்டினால் உண்டாகும் த்ருப்தி.
5. एकाकी—தனியாக இருப்பவன்.
6. अरति—அத்ருப்தி.

சாந்தோக்யோபநிஷத்தில் இந்த [1]ப்ரகரணாரம்பத்தில் பிதா புத்ரனைப் பார்த்து 'எந்த வஸ்துவையறிந்தால் இந்த ப்ரபஞ்சமெல்லாம் அறிந்ததாக ஆகிறதோ அந்த வஸ்துவைக் கேட்டறிந்தாயா' என்று கேட்க, ஒன்றை யறிந்தால் எல்லாம் எப்படி அறிந்ததாகும், என்று புத்ரன் கேட்டான். 'ஒரு ம்ருத் பிண்டத்தை அறிந்தால் மண்விகாரமானவை எல்லாம் அறிந்த தாகிறாப்போல் அந்த வஸ்துவை அறிந்ததால் எல்லாம் அறிந்த தாகக்கூடும்' என்று பிதா பதில் சொன்னார். அந்தவஸ்துவைத் தாங்களே எனக்குச் சொல்ல வேண்டுமென்று பிள்ளைகேட்க, தந்தை பதில் சொல்லுகிறாரென்று தொடங்கி, ''இந்த ப்ரபஞ்சம் ஸ்ருஷ்டிக்குமுன் ஒன்றான ஸத்தாயிருந்தது. அந்த ஸத் 'நான் பஹுவாகக் கடவேன்' என்று ஸங்கல்பித்து, தேஜஸ் ஜலம், ப்ருத்வீ இவைகளைக் க்ரமமாக ஸ்ருஷ்டித்தது. மறுபடியும் அந்த ஒன்றாயிருந்த ஸத் 'வெவ்வேறாயிருந்த அந்த அந்த மூன்றையும் ஒன்றாகக் கலப்பேன்' என்றும், 'கலந்த அந்த மூன்றினால் [2]நாமரூபங்களை உண்டுபண்ணுவேன்' என்றும் ஸங்கல்பித்து, அப்படியே அந்த மூன்றையும் ஒன்றாகக் கலந்து அதனால் நாமரூபங்களை உண்டாக்கிற்று. இந்த ப்ரஜைகளெல்லாம் அந்த ஸத்தை மூலகாரணமாயுடைத்தானவை; இவையெல்லாம் அந்த ஸதாத்மகம்; அந்த ஸத் இந்த ப்ரபஞ்சத்திற்கு ஆத்மா'' என்று சொல்லி, 'தத் த்வமஸி' என்று முடித்ததாகச் சொல்லுகிறது.

இங்கே [3]ம்ருத்-பிண்ட-த்ருஷ்டாந்தத்தினாலே ஜகத்தாகப் பரிணமிக்கும் வஸ்துவைத் தெரிந்துகொண்டாயா என்று பிதா கேட்டாரென்றும், ஜகத்ரூபமாய் பரிணமித்த வஸ்துவை புத்ரனுக்குத் தான் சொல்லுகிறாரென்றும் ஏற்படுகிறது. ஜகத் காரணமான வஸ்துவைச்சொல்லும்போது 'அது நான் பஹுவாகக்கடவேன் என்று ஸங்கல்பித்தது' என்று சொல்லுகிறபடியாலும் 'பரப்ரஹ்மம் இப்படி ஸங்கல்பித்தது' என்று

---

1. प्रकरणं—ஒரு விஷயத்தை நிரூபிக்கும் இடம்.
2. नाम—பெயர்; रूप—உருவம்
3, मृत् + पिण्ड—மண் உருண்டை.

மற்றும் பல உபநிஷத்துக்களில் சொல்லுகிறபடியாலும், இங்கே காரணமாகச்சொன்ன வஸ்து ப்ரஹ்மம் என்றும், அது 'பஹுவாக ஆகக்கடவே' னென்று ஸங்கல்பித்து இந்த நாமரூபங்களை ஸ்ருஷ்டித்தது என்று சொல்லுகையாலே அந்த ப்ரஹ்மமே நாமரூபங்களையுடைய கார்ய மாகவும் என்றும் ஆயிற்று ஏற்படுகிறது.

இங்கு பல ச்ருதிகளில் நிர்விகாரமாகச் சொல்லப்பட்ட பரஹ்மம் வேறு, விகாரவத்தான ப்ரபஞ்சம் வேறு. ஆகையால்; 'இது முன் ஸத்தாகவே இருந்தது' என்கிற வாக்யத்தில், [1]'இதம்' என்று சொல்லப்பட்ட ஸவிகாரமான ஜகத் 'ஸத்' என்று சொல்லப்பட்ட ப்ரஹ்மமாயிருந்தது என்று எப்படிச் சொல்லக்கூடும்? 'பஹுவாகக் கடவேன்' என்றும், 'நாம ரூபங்களை ஸ்ருஷ்டிக்கக்கடவே' னென்றும் ஸங்கல்பித்து தேவ மனுஷ்யாதி-நாமரூபங்களை ஸ்ருஷ்டித்தது என்று சொல்லுகையால் முன் ஸங்கல்பித்த பஹுத்வம் தேவமனுஷ்யாதி நாமரூபத்தையடைகை என்றும், 'முன் ஏகமாயிருந்தது' என்று சொல்லப்படும் ஏகத்வம் தேவமனுஷ்யாதி நாமரூபத்தை விட்டிருக்கை என்றும் ஏற்படுகிறபடியால், நிர்விகாரமான ப்ரஹ்மத்திற்கு இந்த நாமரூபங்களையடைகை எப்படிக்கூடும்? என்றிது முதலான [2]தடஸ்த - சங்கைகளையெல்லாம் பரிஹரிப்பதற்காகவும்: ம்ருத்-த்ரவ்யம் பானை முதலிய ரூபமாய் பரிணமிக்கிறது போல ஸத் என்று சொல்லப்படுகிற வஸ்துவே ஜகத்ரூபமாகப் பரிணமித்தது என்று பிதா சொல்லுகிறாரென்கிற ப்ரமம் தன் புத்ரனுக்கு வாராமைக்காகவும், ப்ரஹ்மத்திற்கும் ப்ரபஞ்சத்திற்கும் சரீராத்ம பாவத்தை 'இந்த ப்ரபஞ்சமல்லாம் ஸதாத்மக' மென்கிற வாக்யத்தால் சொல்லி, 'தத் ஸத்யம்' என்கிற வாக்யத்தால் ஸத் என்று சொல்லப்பட்ட வஸ்து நிர்விகாரமானது என்றும், 'ஸ ஆத்மா' என்கிற வாக்யத்தால் இந்த ப்ரபஞ்சத்திற்கு அவன் ஆத்மா என்றும் சொன்னார். அதனால்

---

1. इदं—இது.
2. तटस्थ:—ஒரு வாதத்தில் வாதிப்ரதிவாதிகள் போல் ஸம்பந்தப்படாமல் உதாஸீனமாயிருந்து கவனிப்பவன்.

'இதம்' சப்தத்தாலும் 'ஸத்' சப்தத்தாலும் சொல்லப்படுவது ப்ரபஞ்சத்தை சரீரமாகவுடைய ப்ரஹ்மம். அதற்குக் கார்யாவஸ்தையில் வந்ததாகச் சொன்ன [1]நாமரூபவத்வமும், காரணாவஸ்தையில் வந்ததாகச்சொன்ன நாமரூபசூன்யத்வமும், பால்யம், யௌவனம் முதலான சரீரத்தின் அவஸ்தைகளெல்லாம் சரீரத்தின் வழியாய் ஆத்மாவில் சொல்லப்படுகிறப்போல இந்த ப்ரஹ்மத்திற்கு, சரீரமான ப்ரபஞ்சத்தின் வழியாகச் சொல்லப்படுகிறது. ஆகையால் 'இதம்' என்று கார்யமான ப்ரபஞ்சத்தைச் சொல்லும் சப்தத்திற்கு நாமரூபங்களை அடைவதாகிய கார்யாவஸ்தையையடைந்த ப்ரபஞ்சத்தை சரீரமாகவுடைய ப்ரஹ்மம் அர்த்தம். 'ஸத்' என்று காரணாவஸ்த—ப்ரஹ்மத்தைச் சொல்லும் சப்தத்திற்கு நாமரூபங்களில்லாத ப்ரபஞ்சத்தை சரீரமாகவுடைய ப்ரஹ்மம் அர்த்தம். இந்த கார்ய—காரண ப்ரஹ்மங்களுக்கு அபேதம் சொல்லுவதில் அநுபபத்தியில்லை என்று புத்ரனுக்குத் தெரிவிக்கிறார்.

இந்த சரீராத்மபாவத்தைச் சொன்னமாத்திரத்தால் ப்ரபஞ்சத்தைச் சொல்லும் 'இதம்' சப்தத்திற்கு ப்ரஹ்மம் அர்த்தம் என்பதை எப்படி புத்ரன் அறியக்கூடும்? அந்த அபிப்ராயத்தால் பிதா சொன்னார் என்று எப்படிச் சொல்லக்கூடும்? என்றால், புத்ரனான ச்வேத கேது, லோகத்தில் தேஹாத்மவிவேகமுள்ள இதரர்களுடைய 'நான் மனுஷ்யன்' 'நான் தேவதத்தன்' இது முதலிய வ்யவஹாரங்களால் சரீரத்தைச் சொல்லும் மனுஷ்யாதி-சப்தங்கள் அந்தச் சரீரத்தில் உள் புகுந்திருக்கிற ஆத்மபர்யந்தத்தைச் சொல்லுகிறது என்று அறிந்து, தானும் அப்படியே வ்யவஹரிக்கிறவனாகையாலே சரீரத்தைச் சொல்லும் சப்தமெல்லாம் அதன் ஆத்மாவளவும் சொல்லும் என்று [2]வ்யுத்பத்தி அவனுக்கு உண்டாயிருக்கிறது என்று பிதாவுக்கு அபிப்ராயம். ஆகையால்தான், சரீரத்தைச் சொல்லும்

---

1. நாமரூபத்வம் — தேவமனுஷ்யாதி - ரூபங்களையும் தேவமனுஷ்யாதி-நாமங்களையும் உடைத்தாயிருக்கை.
2. व्युत्पत्ति—ஞானம்.

ச்வேத கேதுசப்தத்தாலே புத்ரனை [1]ஸம்போதித்துச் சொல்லு கிறார்.

'இதெல்லாம் ஸதாத்மகம்' என்று சொன்ன பிதாவுக்கு ப்ரபஞ்சத்திற்கு 'ஸத்' என்று சொல்லப்படும் ப்ரஹ்மம் ஆத்மா, இந்த ப்ரபஞ்சம் ப்ரஹ்மத்திற்கு சரீரம் என்று சொல் லுவதிலும் அதைக்கொண்டு முன்சொன்ன சங்கைகளைப் பரி ஹரிப்பதிலும் தாத்பர்யம். ஒரு மண்ணே பல பானை, மடக்கு, சட்டி முதலிய விகாரத்தை யடைகிறது. ஆகையால் ம்ருத்-த்ரவ்யமே இவைகளெல்லாமென்று காட்டத்தொடங்கி, ஒரு வன் அந்தப் பானை முதலியவைகளைக் காட்டி, இவைகளெல் லாம் மண்ணுருண்டையாயிருந்தது, இப்பொழுது குயவன் வேலை யால் இப்படிப் பலவித வஸ்துக்களாக ஆகியிருக்கின்றன என்று சொல்லி, 'அதுதானிது' என்று காட்டுகிறாப்போல, இங்கும் ப்ரபஞ்சமெல்லாம் ப்ரஹ்ம–கார்யம் என்று சொல்லத் தொடங்கி, காணப்படுகிற இந்த ஸ்தூல-ப்ரபஞ்ச–சரீரகமான ப்ரஹ்மம் முன் ஸூக்ஷ்ம–ப்ரபஞ்ச-சரீரக-ப்ரஹ்மமாயிருந்தது. அது ஒருவனுடைய வ்யாபாரமில்லாமலே தன் ஸங்கல்பத்தா லேயே தன் விசித்ர சக்தியைக்கொண்டு தேவ-மனுஷ்யாதி-ரூபங்களை உண்டாக்கி, ஸ்தூல-ப்ரபஞ்ச சரீரக-ப்ரஹ்மமா யிற்று. அந்த ப்ரஹ்மம்தானிது என்று காட்டுவதற்காக 'தத்–த்வமஸி' என்று சொல்லுகிறார்.

முன் ஆரம்பத்தில் கார்யத்திற்குக் காரணாவஸ்தையைச் சொல்லி, இந்த தத் த்வமஸியால் காரணத்திற்குக் கார்யா வஸ்தையைக் காட்டுகிறார். ஆகையால் 'தத்' பதத்திற்கு ஸூக்ஷ்ம-ப்ரபஞ்ச-சரீரக-ப்ரஹ்மம் அர்த்தம். 'த்வம்' பதத் திற்கு ச்வேதகேது என்று பெயருடைய ஸ்தூல-சரீர-[2]விசிஷ்ட னான ஜீவ-சரீரகமான ப்ரஹ்மம் அர்த்தம். இதனால் முன் ஸாமான்யத்தில் காட்டிய அர்த்தத்தை விசேஷத்தில் காட்டு கிறதாகிறது. இப்படி காரணாவஸ்தா-விசிஷ்ட - ப்ரஹ்மத்திற்

---

1. संबोध—கூப்பிட்டு.
2. विशिष्टः—கூடியவன்.

கும், கார்யாவஸ்தா - விசிஷ்ட - ப்ரஹ்மத்திற்கும் ஐக்யத்தை புத்ரனுக்குத் தெரிவிக்கிறாரேயொழிய, ச்வேதகேது என்கிற ஜீவாத்மாவுக்கும் ப்ரஹ்மத்திற்கும் ஐக்யத்தை உபதேசிக்க வில்லை.

ப்ரஹ்மம் ஸர்வஜ்ஞும், ஸர்வசக்தி,ஸத்யஸங்கல்பம். இந்த ஜீவன் அத்யல்பஜ்ஞன், அல்பசக்தியுள்ளவன், ஸத்யமான ஸங் கல்பமில்லாதவன், பசி, தாகம் முதலிய அளவில்லாத ஹேயங்க ளுக்கு இடமானவன், ஆகையால் இவ்விருவருக்கும் ஸ்வரூபத் தில் ஐக்யம் எவ்விதத்திலும் அநுபபந்நம்.

இப்படியிருக்க, ச்வேதசேது என்கிற ஜீவாத்மாவுக்கு அஜ் ஞானம், அசக்தி முதலியவைகளைத் தாம் நேராகக் கண்டிருக்க நத்வத்தை அறிந்துகொள்ளத் தன்னை ப்ரார்த்திக்கும் தன் புத்ர ருன அந்த ச்வேதகேதுவுக்குப் பிதாவாகையால் ஆப்தரான இவர் ஸர்வஜ்ஞஸர்வசக்திகமான ப்ரஹ்மத்துக்கும் அவனுக்கும் அநுபந்நமான ஸ்வரூபைக்யத்தை உபதேசிக்கிறார் என்பது மிகவும் நம்பத்தக்கதன்று.

'நீ ஆசார்யன் முகமாய் ப்ரஹ்மத்தை அறிந்தாயா' என்று தந்தை கேட்டதற்கு, 'என் ஆசார்யன் எனக்குச் சொல்லவில்லை, தாங்களே சொல்லவேண்டும்' என்கிற புத்ர னுடைய வாக்யத்தால் அவனுடைய அஜ்ஞானத்தைப் பிதா அறிந்துகொண்டிருக்கிறார் என்பதும், 'நீ பதினைந்து நாள் பட்டினி கிடந்து வா' என்ற பிதாவின் [1]நியமனத்தினல் பதி னைந்து நாள் பட்டினி இருந்து பதினாறுவதுநாள் தன்னிடம் வந்த புத்ரன், 'என்னை ப்சி பாதிக்கிறது, ஒன்றும் தெரிய வில்லை' என்று சொல்லுகையால் இவன் பசி முதலிய [2]ஹேயங் களையுடையவன் என்று தந்தை அறிந்திருக்கிறாரென்கிற அம் சமும் அந்த ப்ரகரணத்தைப் பார்த்தால் ஏற்படுகிறது.

ப்ரஹ்மத்திற்கு, குயவனைப் போலன்றிக்கே, ஸங்கல்ப மாத்ரத்தாலே ஸ்ருஷ்டி சொன்னதால், அதனுடைய ஸர்வஜ்

---

1. नियमनं—கட்டளை.
2. हेय—வெறுக்கத்தக்க.

ஞத்வம் ஸர்வசக்தித்வம், ஸத்யஸங்கல்பத்வம் முதலியவை களைப் பிதா தாமே சொல்லுகிறார்.

ப்ரஹ்மத்திற்கு இந்தக் குணங்களும், ஜீவாத்மாவுக்கு அல்பஜ்ஞத்வாதி குணங்களும், [1]கல்பிதங்களாய் அபரமார்த்தமாகையால், அவை ஸ்வரூபைக்யத்திற்கு விருத்தமன்று என்கிற அபிப்பிராயத்தால் பிதா சொல்லுகிறார் என்று சொல்லவுங்கூடாது. அப்படியானால், 'இவைகள் கல்பிதங்கள், ஆகையால் அபரமார்த்த' மென்று சொல்லியன்றோ ஸ்வரூபைக்யத்தை உபதேசிக்கவேண்டும். இந்த ப்ரகரணத்தில் அவை அபரமார்த்தமென்று சொன்னதாகக் காணவில்லை. அப்படியிருக்க, தன்னுடைய அஜ்ஞானம் அசக்தி முதலியவைகளை நேராய்க் கண்டிருக்கிற ச்வேதகேது தனக்கு ஸர்வஜ்ஞமான ப்ரஹ்மத்தோடு ஐக்யம் சொல்லுகிறார் என்று இந்த வாக்யத்தின் பொருளை க்ரஹித்தானென்பது [2]அத்யந்தம் [3]அஸம்பாவிதமாகையால் இவன் அந்த அர்த்தத்தை எல்லாம் தெரிந்து கொண்டான்' என்று ச்ருதியில் மேலே காணப்படும் வாக்யமும் அநுபபந்நமாய்விடும்.

கீழே 'ஒரு ம்ருத்-பிண்டத்தை அறிந்தால், ம்ருத்-விகாரமெல்லாம் அறிந்ததாகிறாப்போல ப்ரஹ்மத்தை அறிந்தால் ப்ரபஞ்சமெல்லாம் அறிந்ததாய்விடும்' என்று சொல்லி, 'அது தான் எப்படிக் கூடும்' என்கிற சங்கையைப் பரிஹரிக்கைக்காக ம்ருத் ஒன்றுதான் பரமார்த்தம். மற்ற அதன் விகாரங்களெல்லாம் அபரமார்த்தம் என்று த்ருஷ்டாந்தத்தில் காட்டினதால், ப்ரஹ்மம் ஒன்றுதான் பரமார்த்தம், மற்ற அதன் விகாரமான ஜகத்தெல்லாம் அபரமார்த்தம் என்று தெரிந்துகொள்ளக்கூடும். ஆகையால் ப்ரஹ்மத்திற்குத் தான் சொன்ன ஸர்வஜ்ஞத்வாதிகுணங்களும், ச்வேதுகேது தன்னிடத்தில் கண்ட அஜ்ஞத்வாதிகுணங்களும் அபரமார்த்தங்கள்

---

1. कल्पितं—இல்லாததை இருப்பதாக எண்ணுவது அல்லது சொல்லுவது.
2. अत्यन्तं—மிகவும்.
3. असंभावितं—எண்ணத்தகாதது.

என்று தானே அறிந்து கொள்ளக்கூடும். அப்படியறிந்து ப்ரஹ்மத்திற்கும் தனக்கும் ஸ்வரூபைக்யத்தை அறிந்துகொள் ளக்கூடும் என்கிற அபிப்ராயத்தால் பிதா இவ்விரண்டுக்கும் ஸ்வரூபைக்யத்தைச் சொன்னார். புத்ரனும் அவரபிப்பிராயத் தைத் தெரிந்துகொண்டு அந்த வாக்யத்தின் பொருளை அறிந் தான் என்று சொல்லுகிறது. அகையால் ஒரு அநுபபத்தியு மில்லை என்று சொல்லவும் கூடாது.

ம்ருத் ஒன்றுதான் ஸத்யம். அதன் விகாரங்களெல்லாம் மித்யை என்று அந்த ப்ரகரணத்தில் சொல்லப்படவில்லை. அப்படி இருந்தால் [1]'ம்ருத்திகைவ ஸத்யம்' என்று சொல்ல வேண்டும். அப்படிச் சொல்லாமல், [2]'ம்ருத்திகேத்யேவ ஸத்யம்' என்று சொன்னதால் 'பானை சட்டி முதலியவைகளெல்லாம் ம்ருத்-த்ரவ்யமே என்கிறதேயதார்த்தம்'' என்பதே அவரு டைய அபிப்பிராயம் என்று ஏற்படுகிறது.

இப்படியே, மண்ணின் விகாரமான பானை மடக்கு முத லானவை வாக்காலே ஆரம்பிக்கப்படுகின்றன என்கிற இம் மாத்ரத்தாலே வாக்காலே வ்யவஹரிக்கப்படுகிறது என்று கிடைக்குமே யொழிய மித்யை என்று கிடைக்காது.

மேலும் 'ம்ருத் பிண்டத்தையறிந்தால் அதன் கார்யமெல் லாம் அறிந்ததாக ஆகிறது' என்று சொல்லி, அதை உபபா திப்பதற்காக, இந்த 'வாசாரம்பண' வாக்யம் தொடங்கப் பட்டிருக்கிறது. காரணம் ஸத்யம், கார்யம் மித்யை என்று சொன்னால், கார்யம் என்பது ஒன்று இருத்தாலன்றோ காரணத் தை யறிந்தால் கார்யமும் அறியப்பட்டதாகும் என்று சொல்ல லாம். ஆகையால் கார்யம் மித்யை என்று சொன்னதால் கீழ்ச் சொன்னது[3] உபபாதிதமாகாது. ஆகவே கீழ்ச் சொன்னதற்கு உப பாதகமாகும்படியானதையே இந்த வாக்யத்திற்கு அர்த்தமாகக் கொள்ளவேண்டும். அந்த அர்த்தமாவது—கார்யகாரணங்

---

1. मृत्तिकैव सत्यं—மண்தான் ஸத்யம்.
2. मृत्तिकेत्येव सत्यं—மண்ணே என்கிறதேயதார்தம்.
3. நிருபிக்கப்பட்டதாக ஆகாது.

களிரண்டும் ஒன்று என்பதுதான். அப்போது இரண்டும் ஒன்ருகையால், காரணவஸ்துவை அறிந்தால், கார்யவஸ்து அறியப்பட்டதாகிறது. ஒரு த்ரவ்யம் ஒரு ஆகாரத்தோடு இருந்து காரணமாகிறது; அதே த்ரவ்யம மற்ரெரு ஆகாரத்தையடைந்து கார்யமாகிறது. உதாஹரணமாக, ம்ருத்-த்ரவ்யம் பிண்டாகாரமாயிருக்கும்போது காரணமாகிறது. அதுவே 'பானை' 'சட்டி' என்கிற வ்யவஹாரம் வருவதற்காக பானை முதலிய ஆகாரத்தை அடைந்து கார்யமாகிறது. த்ரவ்யம் ஒன்றுனபடியால், ம்ருத்பிண்டத்தை அறிந்தால் பானை, சட்டி முதலியவைகளையும் அறிந்ததாகிறது. ஆகையால் 'வாசாரம்பண' வாக்யத்திற்கு, 'இது பானை', 'இது சட்டி' என்றிவை முதலிய லோகவ்யவஹாரம் நடப்பதற்காக ம்ருத் - த்ரவ்யம் பிண்டாகாரத்தை விட்டு, பானை முதலான அந்தந்த ஆகாரங்களையும் அந்தந்தப்பெயரையும் அடைகிறது. அது ம்ருத்-த்ரவ்யத்தைக்காட்டிலும் வேறன்று என்று அர்த்தம் சொல்லுவது தான் உசிதம். ஆகையால் இத்த ப்ரகரணத்தில் ப்ரபஞ்சத்திற்கு மித்யாத்வம் சொல்லப்படவில்லை.

தன் புத்ரனுக்கு ப்ரபஞ்சமித்யாத்வத்தைத் தெரிவிக்க பிதாவுக்கு அபிப்பிராயமானுல், அப்போது அதற்காக, 'ஒரு கயிற்றின் ஸ்வரூபத்தை அறிந்தால், இது ஸர்ப்பம், [1]அம்புதாரை. பூமியின் வெடிப்பு இது முதலான ப்ரமத்தினுலுண்டாகும் ஸர்ப்பம், அம்புதாரை, பூமியின் வெடிப்பு முதலிய விகாரங்களெல்லாம் அறியப்பட்டதாகிறதுபோல, ப்ரஹ்மம் ஒன்றையறிந்தால் அதில் ப்ராந்தியினுலுண்டான இந்த ப்ரபஞ்சரூபமான விகாரங்களெல்லாம் அறிந்ததாகும்' என்று சொல்ல வேண்டும். ப்ரஹ்மஸ்வரூபத்தையும் ப்ரபஞ்சஸ்வரூபத்தையும் இது வரையில் அறியாதவனுன தன்புத்ரனுக்கு, ம்ருத்தின் விகாரமான பானை சட்டி முதலானவை பொய் என்ற த்ருஷ்டாந்தஜ்ஞானமே இருக்கமாட்டாது. கயிற்றை ஸர்ப்பமாக க்ரஹிப்பது தன்னிடத்திலும் பிறரிடத்திலும் காண்கையால்

---

1. ஜலத்தைக் கொண்டுபோகும்பொழுது பூமியில் கோடாக சிந்தியதினுல் உண்டான அடையாளம்.

கயிறுதான் உள்ளது, ஸர்ப்பம் முதலியவை பொய் என்கிற த்ருஷ்டாந்தஜ்ஞானம் அவனுக்கு சுலபமாய் வரக்கூடும். ஆகையால் [1]ரஜ்ஜுஸர்ப்ப-த்ருஷ்டாந்தத்தை விட்டு ம்ருத்-பிண்ட- த்ருஷ்டாந்தத்தைச் சொல்வது அநுபபந்நமாகும். ம்ருத் பிண்டம் பானை சட்டிகளாக ஆகிறது. ரஜ்ஜு, ஸர்ப்பமாகத் தோன்றுகிறது என்று இவ்விரண்டு த்ருஷ்டாந்தங்களுக்கும் இவ்வளவு [2]வைஷம்யமுள்ளது.

இப்படி 'ஒன்றை யறிந்தால் ப்ரபஞ்சமெல்லாம் அறிந்ததாக ஆகிறது' என்று தந்தை புத்ரனுக்குச் சொன்னதுபோல, முண்டகோபநிஷத்தில், 'ஒரு வஸ்துவையறிந்தால் எல்லாம் அறிந்ததாகும்' என்று கேட்டிருக்கிறேன். அந்த வஸ்து எது?'' என்று சிஷ்யன் ஆசார்யனைக் கேட்க, ஜகத்காரணமான ப்ரஹ்மத்தை ப்ரஸ்தாபித்துக்கொண்டு, [3]ஊர்ண-நாபி என்னும் ஒரு ஜந்து தன் வாயிலிருந்து நூல்களை வெளியிலுண்டாக்கி அதைக் கொண்டு [4]விஹரித்து, மறுபடியும் அந்த நூலை விழுங்கி விடுவது போல, ப்ரஹ்மமும் ப்ரபஞ்சத்தையுண்டாக்கி, பிறகு தானே [5]க்ரஸிக்கின்றது. 'எப்படி பூமியில் ஓஷதிகள் உண்டாகின்றனவோ அப்படியே ப்ரஹ்மத்தினிடமிருந்து ப்ரபஞ்சம் உண்டாகிறது' என்று இந்த த்ருஷ்டாந்தங்களைக் காட்டி இந்த ப்ரஹ்மத்தை அறிந்தால் ஜகத்து அறியப்பட்டதாகும்' என்று சிஷ்யனுக்கு ஆசார்யன் பதில் சொன்னதாகத் தெரிகிறது.

இதே ரீதியில், ப்ருஹதாரண்யகத்தில் யாஜ்ஞாவல்க்யர் தன் பத்னிக்கு, 'ப்ரஹமத்தையறிந்தால் இந்த ப்ரபஞ்சங்களெல்லாம் அறிந்ததாகிறது' என்று சொல்லி, ஈரவிறகில் உன்டான அக்னியிலிருந்து புகைகள் கிளம்புவது போல இந்த ப்ரஹ்மத்திலிருந்து ப்ரபஞ்சங்கள் உண்டாகின்றன என்று

---

1. रज्जुसर्प—பழுதைப் பார்த்து பாம்பு என்று ப்ரமிப்பது.
2. वैषम्यं—வித்தியாஸம்.
3. ऊर्णनाभिः— சிலந்தி வகையைச் சேர்ந்த ஒரு சிறிய பூச்சி.
4. ஸஞ்சரித்து.
5 விழுங்குகிறது.

ப்ரஹ்மம் ஜகத் காரணம் என்பதற்கு த்ருஷ்டாந்தம் காட்டினார்' என்று சொல்லப்பட்டிருக்கிறது.

முதல் ஊர்ண-நாபி-த்ருஷ்டாந்தத்தில் ஜந்துவின் சரீரத்தில் ஒரு பாகம் நூலாகிறது. இரண்டாவதில் பூமி ஓஷதிகளாக மாறுகிறது. மூன்றாவதில் ஈரவிறகு புகையாக மாறுகிறது. இப்படி ஆசிரியர்கள் கூறிய மூன்று த்ருஷ்டாந்தங்களிலும் ப்ராந்தி என்று தோன்றுகிற த்ருஷ்டாந்தம் சொன்னதாகக் காணவில்லை. ஆகையால் ம்ருத் பிண்ட த்ருஷ்டாந்தத்தால் ப்ராந்தியைக் காட்டுகிறார் என்பது மிகவும் அநுபபந்நம். ஆகையால் 'தத் த்வமஸி' வாக்யத்திற்கு ஜீவ - ப்ரஹ்மஸ்வரூபைக்யம் அர்த்தமென்று சொல்லுவது சரியல்ல.

இந்த ஜீவாத்மஸ்வரூபத்தில் ஸ்த்ரீ, [1]புமான், தேவன், மனுஷ்யன், பசு, பக்ஷி, மரம் முதலிய ஜாதிகள் கிடையாது. இவையெல்லாம் சரீரத்திலுள்ள ஜாதிபேதங்கள். ஜீவாத்மாக்களின் ஸ்வரூபத்தில் தாரதம்யமும் கிடையாது. எல்லா ஜீவாத்மாக்களும் ஞான காரர்களாய் ஸமானராயிருப்பார்கள். இவர்கள் [2]பத்தர், முக்தர், நித்யர் என்று மூன்று வகைப்பட்டிருப்பார்கள். ஸம்ஸாரத்தில் ஸுகதுக்கங்களை அனுபவிப்பவர்கள் பத்தர். அது கழிந்து மோக்ஷத்தை அடைந்தவர் முக்தர். எப்போதும் [3]ஸம்ஸாரகந்தமே இல்லாதவர் நித்யர். 'எப்போதும் பரமாத்மஸ்வரூபத்தைப் பார்த்துக்கொண்டிருக்கிறார்கள்' என்று சொல்லும் ச்ருதியால் மூன்றாவது வகுப்பிலுள்ளவர்கள் உண்டென்று ஏற்படுகிறது.

---

1. पुमान्—புருஷன்.
2. बद्धः—ஸம்ஸாரத்தில் இருப்பவன்
3. संसारगन्धः—ஸம்ஸாரத்தின் வாஸனை.

## ॥ संसारसत्यत्वनिरूपणम् ॥

## ஸம்ஸார – ஸத்யத்வ – நிருபணம்

இந்த ஜீவாத்மாவுக்கு ஸம்ஸாரமாவது புண்யம் பாபம் என்கிற இவன் செய்யும் கர்மத்தினுடைய பலத்தை அனுபவிக்கைக்காக ஈச்வரனுடைய ஸங்கல்பத்தால் வந்திருக்கும் ப்ரக்ருதி என்று பெயருடைய அசேதனவஸ்துவினுடைய ஸம்பந்தம். புண்யமாவது — சாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்ட கர்மங்கள். பாபமாவது சாஸ்த்ரத்தில் நிஷேதிக்கப்பட்ட கர்மங்கள். ப்ருக்ருதியாவது-ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்களுக்கு ஆச்ரயமான அசேதன—த்ரவ்யம். இதின் ஸ்வரூபமும் ஸத்யமானது. இது மேல்மேல் விகாரங்களையடைந்துவரும். அந்த விகாரங்கள் அநித்யம். இது பகவானுடைய ஸ்வரூபத்தையும் ஜீவாத்மாவினுடைய ஸ்வரூபத்தினுண்மையையும் தெரியாதபடி பண்ணும் ஸ்வபாவமுள்ளது. தன் விஷயத்தில் போக்யதா புத்தியையும் உண்டாக்கும். இது பகவானுக்கு ஸ்ருஷ்டிக்கு [1]உபகரணமாயிருக்கும். இது [2]விசித்ர - கார்யகரமாகையால் மாயை என்று இதை ச்ருதி சொல்லுகிறது. [3]ஸத்யலோக பர்யந்தமான ஸகல லோகங்களும் அவைகளிலுள்ள வஸ்துக்களும் இந்த ப்ரக்ருதியின் பரிணாமமாயிருக்கும். பகவான், ஸ்ருஷ்டியின் ஆரம்பத்தில் இந்த ப்ரக்ருதிக்குத் தன் ஸங்கல்பத்தால் ஐந்து ஞானேந்த்ரியங்கள் ஐந்து கர்மேந்த்ரியங்கள், மனஸ் என்று இவைகளுக்குப் பொதுவான மற்றொரு இந்த்ரியம், ஆகாசம், வாயு, தேஜஸ், ஜலம், ப்ருதிவீ என்று பஞ்ச மஹாபூதங்களென்னுமிவ்விகாரங்களை உண்டாக்குகிறான். இம் மஹாபூதங்கள் ஐந்தையும் ஒவ்வொன்றையும் இரண்டாகப் பிரித்து, அதில் ஒவ்வொரு பூதத்தின் ஒரு பாதியை நான்காகப் பிரித்து, அந்த நான்கு பாகங்களையும் மற்ற பூதங்களுடைய பாதிபாதி பாகத்துடன் சேர்க்கிறான். அப்போது

---

1. उपकरण—ஸாதனம்.
2. विचित्रकार्यकर—விசித்ரமான கார்யத்தைச் செய்வது.
3. सत्यलोक—ப்ரஹ்மாவினுடைய லோகம்.

ப்ருதிவீயினுடைய பாதி-பாகத்துடன் ஜலம், தேஜஸ், வாயு, ஆகாசம் இவை ஒவ்வொன்றினுடைய எட்டிலொரு பாகம் கலந்து [1]'பஞ்சீக்ருத-ப்ருதிவீ' ஆகிறது. இப்படியே ஜலாதிகளிலும் கண்டுகொள்வது. இந்த பஞ்சீக்ருத பூதங்களையும், பதினொரு இந்த்ரியங்களையும் கொண்டு [2]ஸுர-நர-திர்யக்-ஸ்தாவர மென்னும் நான்குவித சரீரங்களை உண்டாக்குகிறான்.

ஆகையால்தான் இந்த சரீரங்களை [3]ப்ராக்ருதமென்றும் [4]பாஞ்சபௌதிகமென்றும் சொல்லுகிறார்கள். ஜீவாத்மாவுக்கு அவனவன் கர்மத்திற்கிடாக அந்தந்த சரீரத்தோடு ஸம்பந்தத்தை ஈச்வரன் உண்டாக்குகிறான். இந்த சரீரத்தோடு ஸம்பந்தத்தால் ஜீவாத்மாவினுடைய தர்மபூதஜ்ஞானத்தினுடைய ஸ்வாபாவிக-விகாஸ-சக்தி தடைபட்டு அது ஸங்கோசத்தை அடைகிறது. இந்த தர்மபூதஜ்ஞானத்திற்கு விகாஸ சக்தியாவது—எங்கும் பரவி எல்லா வஸ்துவையும் க்ரஹிக்கத் தக்க சக்தி. இதற்கு ஸங்கோசமாவது—இந்த சக்தி தடைபட்டு சிலவற்றைமாத்திரம் க்ரஹிக்கை. அப்போது ஜீவாத்மாவினுடைய ஸ்வரூபம் உள்ளது உள்ளபடியே தெரியாமல் போகிறது. ஜீவாத்மஸ்வரூபம் தன்னை அறியத்தகுந்த ஸ்வபாவ

---

1. पञ्चीकृतपृथिवी—ப்ருதிவியின் ஒரு பாதி, ஜலத்தின் எட்டில் ஒரு பங்கு, தேஜஸ்ஸின் எட்டில் ஒரு பங்கு, வாயுவின் எட்டில் ஒரு பங்கு, ஆகாசத்தின் எட்டில் ஒரு பங்கு இவைகளைக் கலந்தால், இது 'பஞ்சீக்ருத ப்ருதிவீ'யாகிறது; இப்படியே ஜலத்தின் ஒரு பாதி, ப்ருதிவியின் எட்டிலொன்று, ஆகாசத்தின் எட்டிலொரு பங்கு இவைகளைக் கலந்தால் 'பஞ்சீக்ருதஜலம்' ஆகிறது. இப்படியே 'பஞ்சீக்ருத தேஜஸ்' பஞ்சீக்ருத வாயு' 'பஞ்சீக்ருத ஆகாசம்' இவைகளுக்கும் பார்த்துக் கொள்ளவும்.
2. सुर—தேவர்கள். नर—மனிதர்கள்.
   तिर्यक्—பசு பக்ஷி முதலியன. स्थावर—செடி, கொடி முதலியவை.
3. प्राकृतं—ப்ரக்ருதியிலிருந்து உண்டானது.
4. पाञ्चभौतिकं—ஐந்து பூதங்களின் சேர்க்கையினால் உண்டானது.

முள்ளதாயிருந்ததேயாகிலும், அதற்குத் தேஹம் முதலியவை களைக் காட்டிலும் தனக்குள்ள வாசியையும், ஈச்வரனைக் காட் டிலும் உள்ள வாசியையும் அறியத்தகுந்த சக்தியில்லை. அதை அறிவிக்கத்தகுந்த சக்தியையுடையது தர்மபூதஜ்ஞானமே. இதற்கு அந்த சக்தி தேஹஸம்பந்தத்தால் தடைபட்டிருக்கிற படியால் அந்த வித்யாசங்களை இவன் அறிகிறதில்லை. ஆகையால் தனக்கும் சரீரத்திற்கும் அபேதப்ரமும் 'நான் ஸ்வதந்த்ரன்' என்கிற ப்ரமும் உண்டாகிறது. [1]வஸ்து ஸ்திதியில் இவன் தேஹாதிகளைக்காட்டிலும் வேறுபட்டவனுகையாலும், ஈச்வர னுக்கு பரதந்த்ரனுகையாலும், 'நான் மனுஷ்யன், கறுத்தவன், சிவந்தவன், ஸ்வதந்த்ரன்' இது முதலான ஞானங்களெல்லாம் ப்ரமமாகிறது. தேஹாத்ம விவேக முள்ளவர்களுடைய 'நான் மனுஷ்யன்', 'கறுத்தவன்', முதலிய ஞானங்கள் 'நான் மனுஷ் யசரீரகன்' என்று இப்படி க்ரஹிக்கிறபடியால் ப்ரமமன்று.

ஜீவாத்மாவுக்கு இன்னும் பல சக்தி யுண்டு. தன்னிடத் தில் புண்ய - பாப - ரூப - கர்ம பலங்கள் தட்டாதபடிக்கீடான சக்தியும், [2]ஜரா-மரணங்களும் பசி தாகங்களும் வராதபடிக்கீடான சக்தியும், தனக்கு இஷ்டங்களெல்லாம் கிடைக்கத்தருந்த சக்தி யும், ஸங்கல்பித்ததை முடிக்கத்தகுந்த சக்தியும் ஈச்வரனுக் குப் போல இருக்கின்றன. இவையெல்லாம் கர்மத்தாலுண் டான சரீரஸம்பந்தத்தால் தடைபட்டு [3]கார்யகாரியாவதில்லை. இந்தச் சக்திகளெல்லாம் இவன் மோக்ஷத்தை யடையும்போது ஆவிர்பவித்து கார்யகாரியாகின்றன. ஈச்வரனுடைய இந்தச் சக்திகளுக்கு ஒருபொழுதும் தடை கிடையாதாகையால் எப் பொழுதும் கார்யகாரியாகவே இருக்கின்றன. இந்தச் சரீரம் குலைந்தபோது பஞ்சபூதங்களும் ஸூக்ஷ்மமாய் இந்த ஜீவனை விட்டுப்பிரியாமலே இருக்கின்றன. அதனுல் அப்போதும் இந்தச் சக்திகள் தடைபட்டே இருக்கின்றன.

---

1. वस्तुस्थिति—உண்மையில்.
2. जरा—கிழத்தனம்.
3. कार्यकारी—கார்யத்தைச் செய்யத்தக்கது.

இந்தப் பூத-ஸூக்ஷ்மங்களும் பதினொரு இந்த்ரியங்களும் ஸ்ருஷ்டி தொடங்கி மஹாப்ரளயம் வரையில் இவனோடு ஒட்டிக்கொண்டே இருக்கும். மஹா-ப்ரளயத்தில் இவைகளெல்லாம் தமஸ்ஸென்னும் அதிஸூக்ஷ்மமான வஸ்துவை யடைந்து இவனோடு ஒட்டிக்கொண்டிருக்கும். ஆகையால் ஸூக்ஷ்மமாகவே ஸ்தூலமாகவோ இருக்கிற ப்ரக்ருதி ஸம்பந்தம் இந்த ஜீவனுக்கு மோக்ஷம் போகிறவரையில் விடாது. இதில் ஸ்தூலப்ரக்ருதி - ஸம்பந்தம் வரும்போது ஸ்வல்பஜ்ஞான-விகாஸம் உண்டாய், சில வஸ்துக்களை அறிந்து கொள்வான். அதி-ஸூக்ஷ்மமான ப்ரக்ருதி ஸம்பந்தம் வந்தபோது ஞானம் அதிஸங்குசிதமாய், இவன் அசேதனத்தைக்காட்டிலும் வாசியில்லாமல் இருப்பான்.

இப்படி இவனுக்கு தேஹாத்மவிவேகம் தடைபட்டிருக்கிறபடியால் ஹேயமான சரீரத்தோடு ஐக்யபுத்தியும், அந்தச் சரீரத்திலும் அதற்குப் போஷகமான அன்னபானாதிகளிலும் போக்யதா-புத்தியும் பிறக்கிறது. பிறகு அவைகளை ஆசைப்பட்டு, அவைகளுக்காக ஸத்கர்மங்களையோ துஷ்கர்மங்களையோ செய்கிறான். அவைகளுக்குப் பலமான ஸுகதுக்கங்களை அனுபவிக்கைக்காக ஸ்வர்க்க நரகாதிகளுக்குப் போவதும் வருவதுமாய், பிறப்பதும் இறப்பதுமாய், இப்படி ஜனன—மரண-ப்ரவாஹத்திலே அகப்பட்டுக் கொண்டு[1]மஹாக்லேசங்களை அனுபவிக்கிறான். ஒரு [2]ஸார்வபௌமன் ஒருவனுக்குப் பல வேஷங்களைப்போட்டு, அவனைக் கூத்தாடச்செய்து, அதைக்கண்டு லீலாரஸத்தை அனுபவிக்கிறாப்போல, ஸர்வேச்வரன் இந்த சேதனனுக்கு அவர்களுடைய கர்மாநுகுணமாக தேவமனுஷ்யாதி ப்ராக்ருத-சரீர ஸம்பந்தமாகியவேஷத்தைக்கட்டி, தேஹாத்ம ப்ரமத்தால் இவன் தட்டுக்கெட்டுத் தடுமாறுகிறபடியைக்கண்டு [3]லீலார

---

1. महाक्लेश—பெரிய கஷ்டங்கள்.
2. सार्वभौम:—சக்ரவர்த்தி.
3. ஸம்ஸாரம்—அதாவது ஜகத்ஸ்ருஷ்டி; ஈச்வரனுடைய ‘லீலா ரஸத்திற்’காகவேயேற்பட்டது. ஆனால் அந்த ஜகத்ஸ்ருஷ்டி ஜீவாத்மாக்களுடைய கர்மத்தை அநுஸரித்திருக்கிறபடியால், ஜீவர்களுடைய கர்மபல அநுபவார்த்தமாயும் ஆகிறது. இப்படி இஜ்ஜீவர்களுடைய அநுபவத்தைக் கண்டு ஈச்வரனுக்கு ஏற்படும் அநுபவம் லீலாரஸம் எனப்படுகிறது.

ஸத்தை அநுபவிக்கிறபடியால் ஈச்வரனுக்கு இந்த ப்ரக்ருதி மண்டலம் 'லீலாவிபூதி' என்று சொல்லப்படுகிறது.

ப்ரக்ருதி-மண்டலமாவது-முன் சொன்ன ப்ரக்ருதி-பரிணாம மான தேசவிசேஷம். ஈச்வர ஸங்கல்பத்தால் இந்த ஸம்ஸாரம் வாஸ்தவமாயுண்டாகிறபடியால் ஸம்ஸாரம் ஸத்யமானது.

## ॥ मोक्षस्वरूपनिरूपणम् ॥

## மோக்ஷஸ்வரூபநிரூபணம்

ஜீவாத்மா, தன் கர்மத்தால் ஜனனமரண ப்ரவாஹத்தில் விழுந்து துக்கப்பட்டுக்கொண்டிருக்கும்போது, ஈச்வரன் இவனுடைய துக்கத்தைப்பார்த்துப் பொறுக்கமாட்டாமல், இவனை அந்த ப்ரவாஹத்தினின்றும் கரையேற்ற நினைத்து, அதற்கு ஒரு [1]அவஸரத்தை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறான். பாணப்புழு ஏதோ கோடு குறிக்க, அது ஒரு எழுத்தாய் முடிகிறாப்போல, ஜீவாத்மா செய்யும் வ்யாபாரங்களில் ஒன்று [2]ஸுக்ருதம் மாதிரியாக ஆகிறது. ஈச்வரன், இதை [3]வ்யாஜமாகக்கொண்டு, மறுஜன்மத்தில் இவன் தாயின் கர்ப்பத்தில் ஜனிக்கும்போது, இந்த ஜீவன் ஆசார்யஸம்பந்தம் பெற்று மோக்ஷ ஸம்பத்தைப் பெறக்கடவன் என்று கடாக்ஷிக்கிறான்.

அந்த கடாக்ஷம் பெற்ற ஜீவாத்மா க்ரமமாய் [4]ஸாத்விகனாய் ஆசார்யஸம்பந்தத்தைப் பெறுகிறான். பின்பு முன் நிரூபித்தபடி தன் ஸ்வரூபத்தையும் ஈச்வரனுடைய ஸ்வரூபஸ்வபாவங்களையும், இருவருக்குமுள்ள ஸம்பந்தங்களையும் ஆசார்யன் தெளிவாய் உபதேசிக்க அறிகிறான். அந்த உபதேசத்தால்

---

1. अवसरः—ஸமயம்
2. सुकृतं—புண்யம்.
3. व्याज—காரணம்.
4. सात्विकः—ஸத்வகுணத்தை அதிகமாக உடையவன்.

[1]த்ருடமான தத்வஜ்ஞானம் பிறந்து, ஸம்ஸாரம் [2]ஹேயம், மோக்ஷஸம்பத்து [3]உபாதேயம் என்கிற விவேகம் உண்டாகிறது. அதனுல் ஸம்ஸாரத்தை விட்டு மோக்ஷத்தை அடையவேண்டு மென்று பேராவல் உண்டாய், ஆசார்யனிடமிருந்து மோக்ஷத் திற்கு உபாயங்களை அறிகிருன்.

இந்த உபாயங்கள் பக்தி, ப்ரபத்தி என்று இருவகை. இவைகளில் பக்தியாவது உபநிஷத்துக்களில் சொல்லப்படும் ஸத்வித்யை, தஹர வித்யை, உபகோஸல வித்யை, சாண்டில்ய வித்யை, ஆநந்த-மய வித்யை, அக்ஷி வித்யை, பூமவித்யை, வைச் வானர வித்யை, ப்ரதர்தன வித்யை, மது வித்யை, பஞ்சாக்னி வித்யை முதலான ப்ரஹ்ம வித்யைகள்.

இவைகள் அந்தந்த வித்யா-ப்ரகரணத்தில் சொல்லப்படும் சில சில குணங்களோடு கூடிய ப்ரஹ்மோபாஸனமாய் இருக் கும். ஒவ்வொரு வித்யையிலும் உபாஸ்யகுணங்கள் வேறு வேருக இருக்கும். எல்லா ப்ரஹ்ம வித்யைகளிலும், ப்ரஹ்மத் திற்கு [4]அஸாதாரணமான ஸத்யத்வம், ஞானத்வம், அநந்தத் வம், ஆநந்தத்வம், அமலத்வம் என்கிற ஐந்து குணங்கள் தொடர்ந்துவரும். இந்த உபாஸனங்கள் எல்லாவற்றினுலும் வரும் மோக்ஷபலம் ஏகரூபமாயிருக்கும். பலத்தில் தாரதம்யம் கிடையாது. இந்த ப்ரஹ்மோபாஸனங்கள் [5]நிரதிசய ப்ரீதி ரூபமாகிறபடியால் பக்தி என்று சொல்லப்படுகின்றன. இந்த ப்ரஹ்மவித்யைகளில் [6]த்ரைவர்ணிகர்களுக்கு மாத்திரம் அதி காரம் உண்டு. இவைகளில் தனக்கு இஷ்டமான ஒரு வித்யை யைத்தான் ஒருவன் அனுஷ்டிக்கவேண்டும். ஒரு வித்யையைத்

---

1. दृढ—உறுதியான.
2. हेय—விடத்தகுந்தது.
3. उपादेयं—ஏற்றுக்கொள்ளத் தகுந்தது.
4. असाधारण – ஒருவனுக்கே உள்ளதாய் மற்றவருக்கு இல் லாதது.
5. निरतिशयप्रीत्ति—மிகவும் அதிகமான ப்ரீதி.
6. त्रैवर्णिक —(ப்ராஹ்மண, க்ஷத்ரிய, வைச்ய என்கிற) மூன்று வர்ணத்தைச் சேர்ந்தவர்.

தொடங்கினுல் ஒரு ஜன்மத்திலேயே முடிவடைகிறது என்கிற நியமமில்லை: ஒரு ஜன்மத்தில் முடிந்தாலும் முடியலாம், பல ஜன்மங்கள் கழிந்து முடிந்தாலும் முடியலாம்.

இதற்கு முடிவாவது ஸாக்ஷாத்கார ரூபமாகை: உபாஸனங்கள் ஸ்மரணரூபமாயிருந்தாலும், [1]அநவரதபாவனையால் [2]ஸாக்ஷாத்காரமாய் முடிகிறது.

இப்படி விளம்பத்தைப் பொறுக்காத த்ரைவர்ணிகர்களுக்கும், ப்ரஹ்மவித்யையில் அதிகாரமில்லாத மற்ற எல்லா சேதனர்களுக்கும் தாங்கள் நினைத்தபோது மோக்ஷத்தை அடைவதற்கு மற்றொரு உபாயம் உண்டு. இதுதான் [3]'ப்ரபத்தி' என்றும், 'சரணுகதி' என்றும், 'ந்யாஸவித்யை' என்றும் பல உப நிஷத்துக்களிலும், இதிஹாஸபுராணங்களிலும், விசேஷமாய் பஞ்சராத்ர சாஸ்த்ரங்களிலும் சொல்லப்படுகிறது. இதன் ஸ்வரூபம்,[4]அநுஷ்டானப்ரகாரங்கள்,எல்லாம் விசதமாயும் விஸ்தாரமாயும் பஞ்சராத்ர சாஸ்த்ரத்தில் சொல்லியிருக்கிறது.உபநிஷத்துக்கு [5]உப ப்ருஹ்மணமான ஸ்ரீ பகவத்கீதையைப்போல இந்த பஞ்சராத்ரமும் பகவானுலேயே சொல்லப்பட்டதாகையாலும், உபநிஷத்துக்களில் சொல்லியிருக்கும் அர்த்தத்தை [6]விசதீகரணம் பண்ணுகையாலும் வேத விருத்தமான அம்சம் இதில் ஒன்றுமிராமையாலும், இது வேதம் போல் ப்ரபல ப்ரமாணமாயிருக்கும்.

---

1. अनवरतभावना —இடைவிடாத த்யானம்.
2. ஸாக்ஷாத்காரம்—சாஸ்த்ரத்தால் அறிவதுபோல் இல்லாமல் நேரில் கண்ணுல் காண்பது போல் பார்ப்பது.
3. प्रपत्तिः—தனக்கு இஷ்டமான ஒரு பலத்தைப் பற்றி மிகவும் த்ருடமான நம்பகத்துடன், 'என்னிஷ்டத்தை நிறைவேற்றி என்னை காப்பாற்ற வேண்டிய பரம் தேவரீருடையது' என்று ஒரு மந்த்ரத்தைக் கொண்டு பகவானிடத்தில் பண்ணும் புத்தி விசேஷம்.
4. अनुष्ठानप्रकारः—செய்யும் முறை.
5. उपबृह्मणं–பொருளை விவரிக்கும் க்ரந்தங்கள்.
6. विशदीकरणं–தெளிவாக்குதல்.

இந்த பஞ்சராத்ரத்தில் [1]"वासुदेवात्संकर्षणो नाम जीवो जायते" என்று வேதவிருத்தமான [2]ஜீவோத்பத்தி சொல்லியிருக்கிறபடியால், இது எப்படி ப்ரமாணமாகும்? என்றால், இங்கே ஜீவாத்மாவுக்கு உத்பத்தி சொல்லவில்லை. ஸங்கர்ஷணன் என்ற பெயருடைய ஒரு ஜீவாத்மா இருந்தாலன்றோ அதற்கு உத்பத்தி சொல்லுகிறது என்று சொல்லுவது? பகவானுடைய வாஸுதேவன் என்கிற [3]வ்யூஹத்திலிருந்து ஸங்கர்ஷணம் என்கிற வ்யூஹம் உண்டாகிறது. இது [4]ஜீவாபிமானியாகையாலே ஜீவன் என்று சொல்லப்படுகிறது. ஸங்கர்ஷண வ்யூஹம் என்கிற பகவானுடைய அவதாரவிசேஷத்திற்கு உத்பத்தி உண்டாகையால் இது வேதவிருத்தமன்று. இந்த அர்த்தம் பஞ்சராத்ரத்தில் அந்த ப்ரகரணத்தை முன்பின் பர்யாலோசித்தால் ஸ்பஷ்டமாகும். வ்யூஹத்தின் ஸ்வரூபம் மேலே சொல்லப் போகிறோம்.

மஹாபாரதத்தில் சாந்திபர்வத்தில் நாராயணீயோபாக்யானத்தில் இந்தப்பஞ்சராத்ர சாஸ்த்ரத்தை மிகவும் கொண்டாடி இது வேதம்போல் ப்ரமாணம் என்று விஸ்தாரமாக வ்யாஸபகவான் சொல்லியிருக்கிறார். ஆகையால் இந்தப் பஞ்சராத்ரம் சொன்ன விஷயத்தில் அப்ராமாண்யசங்கை பண்ணுவது வேதத்தில் சொன்ன அர்த்தத்தில் அப்ரமாண்யசங்கை பண்ணினது போலாகும். ஆகையாலேதான் [5]அபிகமனம், [6]உபாதானம், [7]இஜ்யை, [8]ஸ்வாத்யாயம், [9]யோகம், என்று இந்தச் சாஸ்த்

---

1. "வாஸுதேவாத் ஸங்கர்ஷணோ நாம ஜீவோ ஜாயதே"
2. जीवोत्पत्तिः—ஜீவனுடைய பிறப்பு.
3. व्यूहः—திருமேனிப் பிரிவு.
4. जीवाभिमानी—ஜீவதத்வத்தை தன்னுடையதென்று அபிமானிக்கிற தேவதை.
5. अभिगमनं—காலையில் பகவானை ஸேவிக்கச் செல்லுதல்.
6. उपादानं—பகவதாராதனத்திற்கு வேண்டிய த்ரவ்யங்களை சேகரித்தல்.
7. इज्या—பகவதாராதனம்.
8. स्वाध्यायः—வேதாத்யயனம், சாஸ்த்ரங்களை வாசித்தல் முதலியவை.
9. योगः—பகவத்—த்யானமும், பிறகு நித்திரையும்.

ரத்தில் சொல்லப்பட்ட [1]பஞ்சகால ப்ரக்ரியையைக் கொண்டு பகவதாராதனத்தை இதில் சொன்ன க்ரமத்தால் எல்லா வைதிகர்களும் இதில் சொன்ன மந்த்ரத்தாலேயே நடத்திவருகிறார்கள்.

இந்தப் பக்திப்ரபத்திகளிரண்டில், இந்த சேதனன் தன் அதிகாரத்திற்கு அனுகுணமான ஒன்றை அனுஷ்டித்தபோது, பக்தியோகம் ஸாக்ஷாத்காராவஸ்தையை அடைந்தபிறகு, அந்தச் சரீரத்தின் முடிவில் இவனுடைய புண்யபாபம் [2]நிச்சேஷமாய் கழிந்துவிடுகிறது. ப்ரபத்தியை அனுஷ்டித்தவனுக்கு, ப்ரபத்தியை அனுஷ்டிக்கும் போது இவன் கோலின காலத்திலேயே கர்மங்கள் நிச்சேஷமாய் கழிந்து விடுகின்றன.

கர்மங்களாவன புண்யம், பாபம் இவை இரண்டும். இதில் புண்யமாவது, இவனுக்கு இஷ்டமான ஸாம்ஸாரிக பலங்களுக்கு ஸாதனமாக சாஸ்த்ரங்களில் விதிக்கப்படும் யாகம், தானம், ஹோமம் முதலியவைகளை அனுஷ்டிப்பதால் உண்டாகும் பகவானுடைய ஸங்கல்ப விசேஷம். இது இந்த இந்த கர்மத்திற்கு இந்த இந்த பலங்களைக் கொடுக்கக் கடவோம் என்கிறதாய் இருக்கும். பாபமாவது அநிஷ்ட பலத்திற்கு ஸாதனமான சாஸ்த்ர நிஷித்த கர்மங்களைச் செய்வதாலுண்டாகும் (அதன் பலத்தைக் கொடுப்பதைப் பற்றிய) பகவத் ஸங்கல்பம் இந்த ஸங்கல்பங்கள் இச்சேதனனுக்கு அந்தந்த பலங்களைக் கொடுக்குமளவும் அனுவர்த்திக்கும். இவை அனுவர்த்தித்தால், அந்தந்த கர்மபலங்களைக் கொடுப்பதற்காக ஈச்வரன் மேல் மேல் ஜன்மங்களையுண்டாக்குகிறான். இப்படி வருகிற ஜன்மபரம்பரைக்கு முடிவில்லாமல், எப்போதும் ஜனனமரண ப்ரவாஹத்தில் விழுந்து மஹாக்லேசத்தை அனுபவிக்க வேண்டிவரும். பக்தி ப்ரபத்திகளில் ஒன்றை அனுஷ்டித்தால் அதனால் பகவானுக்கு இவனிடத்தில் ப்ரீதி பிறக்கிறது. அதனால் இதற்கு முன்

---

1. पञ्चकालप्रक्रिया—ஒரு தினத்தை 5 பாகமாகப் பிரித்து ஒவ்வொரு காலத்திலும் செய்யவேண்டிய காரியக்ரமம்.

2. निःशेष—மிகுதியில்லாமல்.

அனாதிகாலம் தொடங்கி இதுவரையில் அனுவர்த்தித்து வந்திருக்கும் கீழ்ச்சொன்ன பகவத் ஸங்கல்பங்களெல்லாம் நிவ்ருத்திக்கும். இவைகளுக்கு நிவ்ருத்தியாவது, இதுவரையில் இவன் செய்த கர்மங்களில் பலம் கொடுத்தது போக, மிகுந்தவைகளுக்குப் பலம் கொடுக்கக் கடவோமல்லோம் என்கிற ஸங்கல்பம். இது பிறந்தால் மேல் ஜன்மத்திற்குக் காரணமில்லையாகையால் அடுத்த ஜன்மம் இருக்காது.

இங்கே அநிஷ்டங்களைக் கொடுக்கத்தக்க பாபகர்மங்கள் போல, இஷ்டமான ஸாம்ஸாரிக பலத்தைக் கொடுக்கும் புண்ய கர்மங்கள் கழியாவிட்டால், அவைகளின் பலமான ஸாம்ஸாரிக-ஸுகங்களை அனுபவிக்கைக்காக ஜன்மம் வரவேண்டி, அந்த ஜன்மத்தில் செய்யும் புண்ய பாபங்களின் பலங்களை அனுபவிப்பதற்காக ஒழிவில்லாத ஜன்மபரம்பரை வந்துவிடும். ஆகையால் பாப கர்மங்களுக்குப்போல, புண்ய கர்மங்களுக்கும் பலம் கொடுக்கக்கடவோமல்லோம் என்று பகவான் ஸங்கல்பிக்கிறான். இப்படி புண்ய பாபரூப கர்மங்கள் கழிந்த பின்பு, அதனால் வந்த அனாதியான ப்ரக்ருதி ஸம்பந்தமாகிய ஸம்ஸாரம் நீங்குகிறது. பின்பு இவன் மோக்ஷத்தைப் பெறுகிறான்.

மோக்ஷமாவது, நித்யவிபூதியில் வரும் பகவதனுபவ விசேஷம். நித்ய விபூதியாவது இந்த ப்ரக்ருதி மண்டலத்திற்கு மேலிருக்கும் ஒரு லோக விசேஷம். இது கீழ்ச்சொன்ன ப்ரக்ருதி பரிணாமமான 'ஸத்ய லோகம்' என்று சொல்லப்படும் சதுர்முக ப்ரஹ்மலோகம்முதலிய லோகங்கள் போலன்றிக்கே 'சுத்த ஸத்வம், என்கிற பெயருடைய த்ரவ்யத்தின் பரிணாமமாயிருக்கும். இந்தச் சுத்த ஸத்வம்,ரஜஸ், தமஸ் என்கிற குணங்கள் கலவாத ஸத்வ குணத்தையுடையதாயிருக்கும். இது . ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற மூன்று குணங்களையுடையதான த்ரிகுணமென்று பெயருடைய ப்ரக்ருதி த்ரவ்யத்தைக்காட்டிலும் மிகவும் வாசியுள்ளதாயிருக்கும். இப்படி சுத்த ஸத்வபரிணாமமான லோகம் உள்ளது என்கிற அம்சம் புருஷ ஸூக்தத்திலும் உத்தரநாராயணத்திலும் ஆதித்யவர்ணனான மஹாபுருஷன் தமஸ்ஸுக்கு அப்பால் இருக்கிறான்' என்று

சொல்லுகையாலும். க்ருஷ்ண யஜுர்வேதத்தில் 'இந்த ரஜஸ் ஸுக்குமேல் வஸிக்கிறுன்' என்றும், ஸுபாலோபநிஷத்தில், [1]'அபுநர் பவ' என்கிற நாடியால் புறப்பட்டு இந்த ஜீவன் ப்ரஹ்மாண்டா [2]வரணமான ப்ருதிவீ, [3]அப், தேஜஸ், வாயு, ஆகாசம் இவைகளை பேதித்து, தமஸ்ஸையும் பேதித்து அதற்கு மேலே போகிறுன்' என்றும் சொல்லியிருக்கையாலும் கிடைக்கிறது. ஸ்ரீ மகாபாரதத்தில் ஆரண்யபர்வத்தில் [4]தேவதூத-முத்கலஸம்வாதத்தாலும் இன்னும் பல ப்ரமாணங்களாலும் இந்த அம்சம் சொல்லப்படுகிறது.

இந்தச் சுத்த ஸத்வ த்ரவ்யம், ப்ரக்ருதி த்ரவ்யம்போல ஞான ஸங்கோசத்தை உண்டாக்குவது, பசி தாஹம் முதலியவைகளையுண்டாக்குவது முதலான தோஷமொன்றும் இல்லாதது. இதன் ஸ்வரூபஸ்வபாவாதிகளை 'நித்யவிபூதிவைபவம்' என்கிற க்ரந்தத்தில் சொல்லியிருக்கிறோம். அதில் கண்டு கொள்ளவும்.

இந்தச் சுத்த ஸத்வத்தின் பரிணுமமான லோகம் 'பரமபதம்' என்றும், 'ஸ்ரீவைகுண்டம்' என்றும், [5]'பரம வ்யோம' என்றும், [6]'த்ரிபாத் விபூதி' என்றும் 'நித்ய விபூதி' என்றும் சொல்லப்படுகிறது. இந்த லோகத்திற்கு பகவத்ஸங்கல்ப விசேஷத்தால் ஒருக்காலும் அழிவில்லை, ஆகையாலேயே இது 'நித்ய விபூதி' என்று பெயர்பெற்றது. இந்த லோகத்தில் [7]'அயோத்யை' என்றும், 'அபராஜிதை' என்றும் சொல்லப் படுகிற ஒரு பட்டணம் உண்டு. அதில் 'ஆநந்தமயம்' என்கிற

---

1. अपुनर्भव—மறுபடி ஸம்ஸாரத்துக்கு வராதபடிப் போவதற்கு மார்க்கமான நாடி.
2. आवरणं—மூடி.
3. अप्—ஜலம்.
4. देवदूतमुद्गलसंवादः
5. परमव्योम—மஹாகாசம்.
6. त्रिपाद्विभूति
7. अयोध्या

ஆயிரக்கால் மண்டபத்தில் திவ்யபர்யங்கத்தில் பகவான் தனக்கு அஸாதாரணமான திவ்யமங்கள விக்ரஹத்தோடு இருக்கிறுன். இவ்விஷயம் தலவகாரோபநிஷத்திலும், கௌஷீதக்யுபநிஷத்திலும், ப்ருஹதாரண்யகத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது: இந்தத் திவ்ய மங்கள விக்ரஹத்தோடுகூடிய பகவானைத்தான் 'பர வாஸுதேவன்' என்று சொல்லுகிறது, இந்த விக்ரஹம் சுத்தஸத்வத்ரவ்யமயமாய், அத்யந்த-விலக்ஷணமாய், பரமாத்மஸ்வரூபம்போல அனுபவிக்க அனுபவிக்க புதிதுபுதிதாய்த் தோற்றிக்கொண்டு, த்ருப்தியில்லாதபடி மேல்மேல் அனுபவிக்க ஆசையையுண்டாக்கும். பகவானுக்குத் தன் ஸ்வரூபத்தைவிட இது மிகவும் ப்ரியமாயிருக்கும். பகவான் முக்தர்களுக்கும், நித்யர்களுக்கும் எப்போதும் அனுபவம் கொடுப்பதற்காக இருக்கும்படி ஸங்கல்பித்திருப்பதால் இது நித்யமாய் இருக்கும்.

ஸர்வேச்வான் இந்த விக்ரஹத்தை அநேகவிதமாய் பரிணமிக்கச்செய்து லோகோபகாரார்த்தமாக அநேகாவதாரங்களைப் பண்ணுகிறுன். அந்த அவதாரங்கள் வ்யூஹம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை என்று நாலு வகைப்படும். இவற்றில் வ்யூஹமென்பது 'ஸங்கர்ஷண ப்ரத்யும்ன அநிருத்த' என்று மூன்றுவகைப்படும். வாஸுதேவனிடத்திலிருந்து உண்டான ஸங்கர்ஷணவிக்ரஹத்தோடு கூடிய பகவான் ஸங்கர்ஷணன் என்று சொல்லப்படுகிறுன். இவன் ஜீவ தத்வத்திற்கு அபிமானி தேவதை. இந்த ஸங்கர்ஷண விக்ரஹத்திலிருந்து ப்ரத்யும்னன் என்கிற விக்ரஹம் உண்டாகிறது. அதோடு கூடிய பகவான் ப்ரத்யும்னன் என்று சொல்லப்படுகிறுன். இவன் மனஸ் தத்வத்திற்கு அபிமானி தேவதை. இந்த விக்ரஹோத்பத்திகளைத்தான் பஞ்சராத்ரத்தில் 'वासुदेवात् संकर्षणो नाम जोवो जायते' என்றும், [1]'संकर्षणात् प्रद्युम्नसंज्ञं मन:' என்றும் சொல்லுகிறதேயொழிய ஜீவாத்மாவுக்கும் மனஸ்ஸுக்கும் உத்பத்தி சொல்லுகிறதன்று. ப்ரத்யும்ன — விக்ரஹத்திலிருந்து [2]அநிருத்த-விக்ரஹம் உண்டாகிறது.

---

1. ஸங்கர்ஷணாத் ப்ரத்யும்ன-ஸம்ஜ்ஞம் மனஃ
2. अनिरुद्ध

இதில் ஸங்கர்ஷண ரூபியான பகவான், தானே பஞ்ச ராத்ர—சாஸ்த்ரத்தையும், ருத்ராந்தர்யாமியாயிருந்து ஜகத் ஸம்ஹாரத்தையும் செய்கிறான். ப்ரத்யும்னரூபனான பகவான் சதுர்முக ப்ரஹ்மாந்தர்யாமியாய் ஜகத் ஸ்ருஷ்டியைச்செய் கிறான். அநிருத்த ரூபனாய் ஜகத் ரக்ஷணத்தைச் செய்கிறான்.

விபவமாவது ராமக்ருஷ்ணாத்யவதாரங்கள். இவைகளைக் கொண்டு, எல்லோராலும் கண்களால் காணப்படுபவனாய், ஸாது-பரித்ராண துஷ்ட நிக்ரஹங்களைச் செய்து, லோகத்தைத் தன் லீலைகளால் ஆனந்திப்பிக்கிறான்.

அந்தர்யாமியாவது ஹ்ருதய ப்ரதேசத்துக்குள்ளே இருப்ப தாய், யோகிகளுக்கு த்யான விஷயமான ஒரு ஸூக்ஷ்ம ரூபத் தோடு கூடிய பகவான்.

அர்ச்சையாவது திவ்யதேசங்களிலே ரங்கநாத ஸ்ரீநிவாஸ வரதாதிரூபனாய்க்கொண்டு ஸர்வ ஸுலபனாய் ஆராதிக்கப்பட்டு, ஆராதகர்களுக்கு வேண்டிய பலன்களைக் கொடுக்கும் விக்ரஹ-விசேஷத்தோடு கூடிய பகவான்.

மேலே சொன்னபடி, ஸம்ஸாரம் கழிந்த ஜீவாத்மா நித்ய விபூதியில் திவ்யபர்யங்கத்தில் வீற்றிருக்கும் பரவாஸுதேவனைக் கிட்டுகிறான். அப்போது அவனுக்கு ஞான ஸங்கோசம் நிச் சேஷமாய்க் கழிந்து ஞானத்திற்கு ஸ்வாபாவிக விகாஸம் ஆவிர் பவிக்கிறது. இந்த ஆவிர்பாவம் நித்ய வீபூதியில் திவ்யபர்யங் கத்திலிருக்கும் பரவாஸுதேவனைக் கிட்டினால்தான் உண்டாகும். இந்த விகாஸத்தால் தன்னுடைய உண்மையான ஸ்வரூபத்தை யும், லீலா விபூதி, நித்யவிபூதி என்கிற [1]உபய விபூதிகளோடும், ஸகல - கல்யாண குணங்களோடும், திவ்ய மங்கள விக்ரஹத் தோடும். ஸ்ரீ பூமி நீளா என்கிற திவ்ய மஹிஷிகளோடும் கூடி யிருக்கிற பகவானையும் உள்ளது உள்ளபடியே எள்ளளவும் விடாமல் அநுபவிக்கிறான்.

---

1. उभय—இரண்டு.



இப்படி அனுபவிக்கப்படும் வஸ்து மிகவும் ப்ரியமாயிருக்கிறபடியால் இந்த அனுபவம் பரமானந்தரூபமாயிருக்கும். இந்த ஆனந்தம் பகவானுக்கும் நித்யருக்கும் முக்தருக்கும் ஸமானமாயிருக்கும். ஆனந்தத்தில் தாரதம்யம் கிடையாது. இந்த ஆனந்தம் பின்பு ஒருக்காலும் நிவ்ருத்திக்காமல், எப்போதும் அனுவர்த்தித்தே வரும். இந்த அனுபவம்தான் மோக்ஷம் என்று சொல்லப்படுகிறது. இம்மோக்ஷம் நித்ய விபூதி என்கிற லோகம் சேர்ந்த பிறகுதான் கிடைக்கும்.

விசிஷ்டாத்வைத - ஸித்தாந்த - ப்ரகரணம் முடிந்தது.

जिज्ञासुसुखबोधाय शिद्धान्तत्रयसङ्ग्रहः ।<br>
श्रीमत्कौशिकवंश्येन देशिकार्येण निर्मितः ॥

ஸ்ரீ ஸித்தாந்த த்ரய ஸங்க்ரஹம் முற்றிற்று.



